நாங்க ரெடி! நீங்க ரெடியா?

# கல்கி

30.10.2005 இதழ்...

அசத்தும்

## தீபாவளி சிறப்பிதழ்!

என்னென்ன வருது?

ஒண்ணு... ரெண்டு...

மூணு... நாலு...

எண்ணிக்கிட்டே இருங்க...

இன்னும் ஏழே நாட்கள்...!



# வட்டமேஜை

## நடுப்பக்க நக்கல்... சிவகாசி கலக்கல்!

✉ நேயம் அடியோடு மறைந்து, சுயநலம் மேலோங்கி நிற்கும் இந்நாளில் மகாப் பெரியவரின் அருள்வாக்கு நல்ல படிப் பினையாக அமையும்.
நாகை, நாகை சந்திரா

✉ தங்கமயில் ஜுவல்லரி அதிபர் சக்ஸஸ் ஸ்டோரியில் அவருடைய நிறுவனத்தின் தோற்றம், வளர்ச்சி, வியாபார உத்திகளை பற்றிப் பேசாமல் இயற்கை விவசாயம் பற்றி அதிகம் இடம் பெற்றுள்ளதே!
திருநெல்வேலி, ஜவகர்

✉ 'விஜயகாந்தின் துணிச்சலான அர சியல் பிரவேசம். ரஜினிகாந்தின் தயக்கம் - யாரின் முடிவில் உங்களுக்கு உடன்பாடு அதிகம்?' என்ற வாசகரின் கேள்விக்கு தராசுவின் பதில் செம தீர்க்க தரிசனம்!
திருவாரூர், கே.ஆர்.ராமசுப்ரமணி

✉ திரை விமர்சனமில்லாத கல்கி, ஒரே வெறுமை போங்கள்.
நெய்வேலி, எஸ்.இந்துமதி



✉ சொன்னதைச் செய்யப்பா சிறு கதை யதார்த்தமான கற்பனை.
கடலூர், வானவில் மூர்த்தி

✉ நடுப்பக்க நக்கல் சிவகாசி சரவெடி போல் கலக்கல்!
கோவை, ராமு அர்விந்த்

✉ கலைஞர், வாசன், எஸ்.ஆர்.பி. போன்றவர்களிடம் இளங்கோவன் மோதிக்கொண்டு இருப்பதை கார்ட்டூனில் படம் பிடித்துக் காட்டி சிரிப்பை வரவழைத்து விட்டீர்கள்.
திருவாரூர், டி.முருகேசன்

✉ தற்சமயம் டென்ஷனாய் இருக்கும் அத்வானியும் கங்குலியுமே வாய்விட்டுச் சிரித்திருப்பார்கள் கற்பனை உரையாடலை படிக்க நேர்ந்திருந்தால்...
கொணவட்டம், கனிமொழி

✉ அத்வானி விலகினால்கூட பா.ஜ.க., ஆர்.எஸ்.எஸ்., சங்பரிவார், பஜ்ரங்தள் ஆகியவற்றின் பிடியில் சிக்கும் அபாயம் தொடர்வது நல்லதல்ல என்று எச்சரித்திருப்பது பா.ஜ.க.வை சிந்திக்க வைக்கக் கூடியதாகும்.
சென்னை, கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரி

✉ சாதாரண மனிதர்கள். காலில் ஒரு முள் குத்தினாலே வாழ்க்கையை வெறுத்து விடுவார்கள். இவர்கள் மத்தியில் அலோஷியஸின் தன்னம்பிக்கை, ஊனமுற்றோர் எல்லோருக்கும் ஒரு வழிகாட்டி.
கமுகுமலை, எஸ்.ஆறுமுகம்

✉ ராஜபாளையம் பேச்சியப்பனின் 'துணையெழுத்து', தேவவிரதனின் 'ஆட்டோவில் ஓர் அழுகை' இரண்டு கதைகளுமே எதிர்பாராத முடிவுடன் திகைப்பில் ஆழ்த்திவிட்டன.
தூத்துக்குடி, பெ.கலாசாமி



✉ பா.ஜ. கட்சியை அடுத்து வழிநடத்த இருப்பது யார் அலசல் கட்டுரை அற்புதம்.
மதுரை, என்.பாலகிருஷ்ணன்




✉ இந்திரா சௌந்தர்ராஜன் எழுதிவரும் 'எங்கே என் கண்ணன்?' தொடர் மிக அருமை. அதில் தெரிவிக்கப்பட்டுள்ள 'யுகக் கணக்கு' என்னை மிகவும் வியப்பில் ஆழ்த்தியது.

*தஞ்சாவூர்,* *அ.சுந்தரேசன்*

✉ பார்வையையும் கேட்கும் திறனையும் இழந்த பின்னரும் 'நிச்சயம் ஒரு நாளைக்கு கிரேட் ஆகாம சாகமாட்டேம்மா' என்று சபதம் செய்திருக்கும் ஃப்ரெட்ரிக் அலோஷியஸுக்கு வெற்றி நிச்சயம்; இது வேத சத்தியம்.

*நெல்லை,* *செ.சத்தியசிலன்*

✉ பிணவறையில் வேலை பார்க்கும் அஸ்வத்தையாவின் உள்ளத்து உணர்வுகளை தெள்ளத் தெளிவாகப் படம் பிடித்துக் காட்டி ஒரு உலுக்கு உலுக்கிவிட்டார் கதாசிரியர். 'நிழலின் நிஜம்' சிறந்த படைப்பு. பாராட்டுக்கள்!

*மதுரை,* *வஸந்தா பரமசிவம்*


# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் :
**கி. ராஜேந்திரன்**

கல்கி பில்டிங்கஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

ஆசிரியர் குழு :
**அனுராதா சேகர்**
**ஆர்.சி. ஜெயந்தன்**

வடிவமைப்பு :
**எஸ். ஸ்டீஃபன்**
**பி.ஆர். ராஜன்**

தொலைபேசி :
2225 1522, 2225 0623,
2225 1324

தொலைநகல் :
044 - 2225 1021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.390/-
ஆறு மாதம் : ரூ.195/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 63.50 யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.2060/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

**ஒவ்வொரு இதழும் உங்கள் பேழைக்கு**

# தலைகனத்தில் தடுமாறுகிறாரா விஜய்?

"நம்ம விஜய்க்கு என்ன ஆச்சு?" - கோடம்பாக்கத்தில் இரண்டு சினிமா நிருபர்கள் சந்தித்துக்கொண்டால் இதுதான் இப்போது பேச்சு! 'கில்லி', 'திருப்பாச்சி' படங்களின் வெற்றிக்குப் பிறகு விஜய் ரொம்பவே மாறிவிட்டார் என்பதுதான் திரையுலகின் கமெண்ட்! அப்படி என்னதான் செய்துவிட்டார் விஜய்?

"நிருபர்கள், மீடியா ஆட்கள், சக கலைஞர்கள் என்று யாரையுமே விஜய் மதிப்பதில்லை! 'செட்டுக்குள் நிருபர்களை விடாதே! படம் ரிலீஸாகும்போது ஒருமுறை ஸ்டில் கொடுத்தால் போதும். அதற்கு முன்பு யாருக்கும் படத்தின் ஸ்டில்களைக் கொடுக்காதே!' என்று தயாரிப்பாளர்களை விஜய் கட்டுப்படுத்துகிறார்" என்று விஷயத்தை உடைக்கிறார்கள் பெயர் சொல்ல விரும்பாத பிரபல சினிமா பத்திரிகையாளர்கள். இது உண்மையோ என்பதைப் போல வாகினி ஸ்டுடியோவில் போடப்பட்டிருந்த 'சிவகாசி' படத்தின் கடைவீதி செட்டுக்குள் எந்த நிருபரும் அனுமதிக்கப்படவில்லை. "கில்லி படத்துக்குக் கடைசி நேரத்தில் ஸ்டில்கள் கொடுத்ததுபோல் இப்போது 'சிவகாசி' படத்தின் ஸ்டில்களைக் கொடுத்திருக்கிறார்கள்" என்று நொந்துகொள்கிறார் ஒரு மாலை தினசரியின் சினிமா நிருபர்.

"வசூல்ராஜா, சந்திரமுகி படங்களின் வசூலைவிட 'சச்சின்' குறைவாகத்தான் வசூல் செய்கிறது என்று பாக்ஸ் ஆபீஸ் வட்டாரத்திலிருந்து திரட்டிய தகவலைக் கொண்டு ஒரு பெட்டிச் செய்தி வெளியிட்டேன். அவ்வளவுதான்... அடுத்தநாள் காலை, விஜய் சார்பில் அவரது ஆட்கள் என் அலுவலகத்துக்குப் படையெடுத்து வந்துவிட்டார்கள். எனது பதிப்பாளரைச் சந்தித்து, 'இது பொய்ச் செய்தி' என்று கடுமையாக விவாதித்தார்கள். கையோடு என்னை மன்னிப்புக் கேட்கச் சொன்னார்கள். அந்தச் செய்தியில் உண்மையிருந்தும் நான் மன்னிப்புக் கேட்க வேண்டிய கட்டாயத்துக்குத் தள்ளப்பட்டேன்" என்று நொந்து கொள்கிறார் அவர்.

இது ஒருபுறமிருக்க, காலையில் மலரும் கலர்ஃபுல் தினசரியின் நிருபர் மீது 'பத்து லட்சம் கேட்டு மிரட்டினார்' என்று விஜய் தரப்பிலிருந்து பதிவு செய்த வழக்கு, இன்னும் நிலுவையில் இருப்பதை அறிந்து, சம்பந்தப்பட்ட நிருபரைத் தொடர்பு கொண்டோம்.

"ஏற்கெனவே அந்த வழக்கால் நிறைய மன உளைச்



• ஏ.ஆர். ரகுமான்

• 'கண்ட நாள் முதல்' விழாவில் விஜய்...



சல்களைச் சந்தித்து விட்டேன்... அதைக் கிளற வேண்டாம் ப்ளீஸ்" என்று அவர் மறுத்துவிட்டாலும் சம்பந்தப்பட்ட தினசரியில் விஜய் பற்றி இப்போது செய்திகள் வெளி வருவதில்லை என்பதன் மூலம், இன்னும் பிரச்னை தீரவில்லை என்பது தென்னத் தெளிவாகத் தெரிகிறது.



"திரையுலகில் உள்ள, சாதனை புரிந்த சக கலைஞர்களைக் கூட விஜய் மதிப்பதில்லை என்பதற்கு, அவர் சமீப நாட்களில் கலந்துகொள்ளும் சினிமா விழாக்களே அத்தாட்சி" என்கிறார் ஒரு முன்னணி திருபர். இரண்டு மாதங்களுக்கு முன்பு, இயக்குனர் எஸ்.ஜே. சூர்யா இயக்கிய 'அன்பே ஆருயிரே' படத்தின் இசை வெளியீட்டு விழா ஆல்பர்ட் தியேட்டரில் நடந்தது. சி.டியை ஏ.ஆர். ரகுமான் வெளியிட, விஜய் பெற்றுக்கொள்ள வந்திருந்தார். மேடையில் ரகுமானுக்குப் பக்கத்தில் விஜய்க்கு இருக்கை. ஆனால் சம்பிரதாயத்துக்குக் கூட ரகுமான் பக்கம் திரும்பி விஜய் ஒரு 'ஹாய்' சொல்லவோ, சினேகமாக ஒரு சிறு புன்னகையை உதிர்க்கவோ இல்லை. இசைத்தட்டு வெளியிடும் போதுகூட ரகுமானின் மெல்லிய புன்னகைக்கு விஜய்யிடம் எந்த ரியாக்ஷனும் இல்லை.

'ரகுமானின் வயதைப் பொருட்படுத்தவில்லை என்றாலும் அவரது சாதனைக்காவது கொஞ்சம் மரியாதை கொடுத்திருக்கலாம் விஜய்' என்று அந்த விழாவில் கலந்துகொண்ட ரசிகர்கள்கூட ஃபீல் பண்ணியிருக்கிறார்கள்.

கடந்த மாதம் கன்னிமாரா ஹோட்டலில் நடந்த 'கண்டநாள் முதல்' படத்தின் இசை வெளியீட்டு விழாவில் விஜய், சூர்யா இருவருக்கும் அருகருகே இருக்கைகள். சூர்யா இரண்டுமுறை விஜய் பக்கம் முகத்தைத் திருப்பியும் கடைசிவரை ஆணியில் அடித்த மாதிரி உட்கார்ந்திருந்தார் விஜய். இதற்கெல்லாம் உச்சமாக அமைந்துவிட்டது அண்மையில் நடைபெற்ற 'சந்திரமுகி' படத்தின் இருநூறாவது நாள் விழா. மத்திய அமைச்சர் தாசரி நாராயணராவ் தலைமையில் நடந்த இந்த விழா மேடையில், விஜய்க்கும் இடம் கிடைத்தது. அவருக்குப் பக்கத்தில், ரஜினியின் அடுத்த படமான 'சிவாஜி'யை இயக்கும் ஷங்கரின் இருக்கை.

அரங்குக்கு வெளியே ரஜினி ரசிகர்களின் கூட்டத்தில் சிக்கி, கொஞ்சம் தாமதமாக வந்தமர்ந்த ஷங்கரை ஏறெடுத்தும் பார்க்கவில்லை விஜய். ஆனால், அந்த விழாவில் ரஜினியை வாழ்த்திப் பேசிய விஜய், "ரஜினி எனது தலைவர்" என்று அவரது ரசிகர்களைக் கவரும்விதமாக வாக்குமூலம் கொடுத்தார். "ரஜினியைத் தலைவராக ஏற்றுக் கொண்ட விஜய், அவரிடமிருந்து தன்னடக்கத்தையும் கற்றுக் கொண்டால் நன்றாக இருக்கும்" என்று அரங்கிற்குள்ளேயே புலம்பித் தீர்த்த பத்திரிகையாளர்களுக்கு, கடந்த மூன்றாம் தேதி, க்ரீன்பார்க் ஹோட்டலில் நடந்த 'சிவகாசி' படத்தின் பத்திரிகையாளர்

சந்திப்புக்கு கடைசிவரை விஜய் வராதது பெரிய ஏமாற்றத்தை அளித்துவிட்டது.

துல்லியமாக காலை பதினொரு மணிக்கு பிரஸ்மீட் என்று பத்திரிகையாளர்களுக்கு அழைப்பு விடுக்கப்பட்டதால், சரியான நேரத்தில் பத்திரிகையாளர்கள் குவிந்துவிட்டனர். படத்தின் தயாரிப்பாளர், இயக்குனர், கதாநாயகி, இசையமைப்பாளர் உட்பட அனைவரும் பதினொரு மணிக்கே வந்து டென்ஷனோடு காத்திருந்தனர். தயாரிப்பாளர் தமது செல்போன் மூலம் தொடர்ந்து விஜயைத் தொடர்புகொண்டு அழைத்தபடியிருந்தார். இப்படியே ஒரு மணி நேரம் ஆகிவிட்ட நிலையில் விஜய் இல்லாமலே பிரஸ்மீட் நடத்தி முடிக்கப்பட்டது.

ஒரு பரபரப்பான ஹீரோவுக்கு ஆயிரம் வேலைகள் இருக்கும். பத்திரிகையாளர் சந்திப்புக்கு வரவில்லை என்பதற்காக அவர் தலைகனத்தில் தடுமாறுகிறார் என்று சொல்லிவிட முடியாதுதான். ஆனால் 'பிதாமகன்' படத்துக்காக விக்ரம் தேசிய விருது பெற்றது பற்றி பிரபல சினிமா வார இதழ், விஜய்யிடம் கருத்துக் கேட்டபோது, 'தேசிய விருதெல்லாம் பெரிய விருதல்ல. மக்கள் விருதுதான் என்னைப் பொறுத்த வரை பெரிய விருது' என்று சொல்லியிருந்தார். 'தொடர் வெற்றிகளால் உயரங்களைத் தொட்டு வரும் நிலையில், விஜய் ஏன் இத்தனை இறுக்கமான மனிதராக மாறி வருகிறார்?' என்பதுதான் பலரின் கேள்வியாக இருக்கிறது.

எல்லாவற்றுக்கும் விஜய்யின் பதிலை எதிர்பார்த்து அவரைத் தொடர்பு கொண்டபோது, 'சிவகாசி' படப்பிடிப்பில் பிஸியாக இருந்தார். என்றாலும் விஜய் தரப்பிலிருந்து அவரது தந்தை, இயக்குநர்கள் சங்கத் தலைவர் எஸ்.ஏ. சந்திரசேகரன் நம்மிடம் பேசினார்.

"விஜய் இதற்கு முன்பு கலகலப்பான ஆளாக இருந்துவிட்டு, நடிக்க வந்தபிறகு இப்படி இறுக்கமான ஆளாக மாறிவிட்டார் என்று சொன்னால் அதை ஏற்றுக் கொள்ளலாம். 'சிறுவயது முதலே நான் ரொம்ப ரிசர்வ் டைப்' என்று பத்திரிகை பேட்டிகளில் அவரே பலமுறை சொல்லியிருக்கிறார். யாரிடமும் அதிகம் பேசாமல் இருப்பது அவரது இயல்பு. விஜய் பத்து வயதாக இருக்கும்போது, அவரது தங்கை இறந்து போனார். அந்த இறப்பைத் தாங்கிக்கொள்ள முடியாமல், தனிமையில் வளர்ந்தவர் விஜய். முதல் படத்தில் நடிக்கிறபோதும் அவர் இப்படித்தான் இருந்தார். இன்று நாற்பது படங்களைத் தாண்டிய பிறகும் இப்படித்தான் இருக்கிறார். இது கர்வம் அல்ல. அவர் சூப்பர் ஸ்டாரும் அல்ல. 'சினிமாவில் மட்டும்தான் எனக்கு நடிக்கத் தெரியும்! நிஜ வாழ்க்கையில் என்னால் நடிக்க முடியாது. அதிகம் பேசாமல் அமைதியாக இருப்பது தவறா?' என்றுதான் விஜய் கேட்கிறார்.

எந்த சினிமா விழா என்றாலும் நிகழ்ச்சி தொடங்கும் முன்பு, மேடைக்குக் கீழே எல்லோருடனும் அமர்ந்து 'ஹலோ' சொல்லி நட்பைப் பரிமாறிக்கொண்ட பிறகுதான் மேடை ஏறுகிறார். மேடையில் நடப்பதை கவனிக்கும் நீங்கள், இதையும் கவனிக்க வேண்டாமா?" என்றவர், "ஏ.ஆர். ரகுமான், ஷங்கர் போன்ற சாதனையாளர்கள், சக ஹீரோக்கள் என்று எல்லோரையுமே மதிப்பவர் விஜய்.

இதற்கு 'திருப்பதி' பட பூஜையில் அஜீத்தை சந்தித்து விஜய் வாழ்த்து சொல்லியதே சமீபத்திய உதாரணம். அது உங்கள் கண்ணுக்குத் தெரியவில்லையா?" என்று மடக்கினார். இறுதியில் "நிருபர்களோடு மோதல் என்பதெல்லாம் அவதூறான செய்திகள்" என்று முடித்துக்கொண்டார்.

- கட்டு



• எஸ்.ஏ. சந்திரசேகரன்


வாசகர்களின் எண்ணிக்கை
அதிகரித்த
ஒரே தமிழ் நாளிதழ்
அதிக வாசகர்கள்
படித்த
இணைப்புகள்
இளைஞர்மணி,
வெள்ளிமணி
தினமணி
செய்தியில் முழுமை; சொல்வதில் புதுமை!
Source: NRS 2005



நடிகர் சங்கத்துக்கு உதவியாக அமைய வேண்டுமே தவிர, விரோதமாக ஆகிவிடக் கூடாது. ஆகவே, விஜயகாந்த் நடிகர் சங்கத் தலைவர் பதவியை ராஜினாமா செய்ய வேண்டும். விடுதலைச் சிறுத்தைகள் திருமாவளவன் இப்போது ஒரு திரைப்படத்தில் நடித்துக் கொண்டிருக்கிறார். நாளையே அவர் நடிகர் சங்கத்தில் உறுப்பினராகி,

# நடிகர் சங்கத் தலைவரா...



• தங்கர்பச்சான்



• எஸ்.வி.சேகர்

தென்னிந்திய நடிகர் சங்கத்தின் தலைவரான விஜயகாந்த், புதிய அரசியல் கட்சியொன்றைத் துவக்கியிருக்கும் சூழ்நிலையில், நடிகர் சங்கத்தின் மீது அதிரடி குண்டுகளை வீசியிருக்கிறார் நடிகர் சங்கத்தின் ஆயுட்கால உறுப்பினரான எஸ்.வி. சேகர்.

"அரசியல் தொடர்புகள், உறவுகள்

அடுத்த தேர்தலில் தலைவர் பதவிக்குப் போட்டியிடுவார் என்கிற சூழ்நிலை உருவாகுமேயானால் யாரால் அதைத் தடுக்க முடியும்?" என்கிறார் எஸ்.வி. சேகர்.

இதற்கு இதுவரை விஜயகாந்த் பதிலளிக்காத சூழ்நிலையில், இயக்குனர் தங்கர்பச்சான், "நானும் ஒரு படத்தில் நடித்துவிட்டேன். ஏற்கெனவே படத்தில் நடித்த, நடித்துக் கொண்டிருக்கும் பழ.நெடுமாறன், தொல். திருமாவளவன் உள்ளிட்டோர் நடிகர் சங்கத்தில் சேருவோம்" என்று பேசி உஷ்ணத்தைக் கூட்டியுள்ளார்.

இந்தக் கருத்துக்கள் பெரியளவில் அதிர்ச்சி அலைகளைப் பரவவிட்டிருக்கும் நிலையில், திருமாவளவன் போன்று ஓரிரு படத்தில் நடித்தவர்கள் நடிகர் சங்க உறுப்பினராகவோ அல்லது தேர்தலில்

போட்டியிடவோ வாய்ப்புகள் உள்ளனவா என்பது குறித்து நடிகர் சங்க உறுப்பினர்கள், முக்கியஸ்தர்கள் சிலரிடம் பேசினோம்.

தி.மு.கவைச் சேர்ந்த நடிகர் இயாகு, "நடிகர் சங்கத்தில் நடிகர் எவரும் உறுப்பினராக மனு அளிக்கலாம். ஆனால் அதை ஏற்பதா, வேண்டாமா என்பதை நடிகர் சங்கப் பொதுக்குழு செயற்குழுதான் முடிவு செய்யும். இந்த வீண் குழப்பமெல்லாம் வரக்கூடாது என்பதால்தான் அரசியல் கட்சியைத் துவங்கிய பின்னர் விஜயகாந்த் சங்கத் தலைவர் பதவியை ராஜினாமா செய்ய வேண்டும் என்ற கருத்து வந்திருக்கிறது. ஆக, இதுபோன்ற சிக்கலைத் தடுப்பது விஜயகாந்தின் முடிவில்தான் உள்ளது'' என்றார்.

ஆனால், அதே திமுகவைச் சார்ந்தவரான நடிகர் சந்திரசேகரின் கருத்தோ வேறு மாதிரியாக இருக்கிறது. "ஒரு நடிகர் அரசியலுக்கு வருவது எப்படி ஜனநாயக உரிமை என்று குரல் கொடுக்கிறோமோ, அதேபோல ஓர் அரசியல்வாதி நடிகராக, ஏன் நடிகர் சங்க உறுப்பினராக வருவதும் ஜனநாயக உரிமைதான். அந்த வகையில் திருமாவளவன் போன்றோர் நடிகர் சங்கத்துக்குள் வருவது அவர்களின் ஜனநாயக உரிமை. அவர் ஒரு படத்தில் நடித்து விட்டதால், நடிகர் சங்க உறுப்பினராகி, தேர்தலில் நின்று, செல்வாக்கு இருந்தால் ஜெயித்துக் கொள்ளலாம்" என்

**நடைபெறும் சர்ச்சைகள் குறித்து திருமாவளவனிடம் பேசினோம்...**

**'அன்புத்தோழி'யில் நீங்கள் நடிப்பதே நடிகர் சங்கத்துக்குள் நுழைவதற்கான முஸ்தீபாமே...?**

''அந்தப் படத்தில் நீங்கள் நடித்தால் நன்றாக இருக்கும் என்று எனது நண்பர் வலியுறுத்தியதன் பேரில் நடித்தேன், அவ்வளவுதான்... மற்றபடி இதை வேறெதற்குமான முஸ்தீபுகள், முன்னேற்பாடுகள் என்றெல்லாம் நான் கருதவே இல்லை''

**நீங்கள் அடுத்த நடிகர் சங்கத் தலைவர் தேர்தலில் போட்டியிட விருப்பதாகச் செய்திகள் வருகின்றனவே...?**



''இந்தப் படத்தில் நடித்து விட்டதால் நடிகன் என்ற முறையில் நடிகர் சங்க உறுப்பினராக முடியும். ஆனால் எனக்கு அப்படி ஓர் எண்ணம் இப்போதைக்கு இல்லை. காரணம், நடிப்பு



# ...திருமாவளவன்?



• சந்திரசேகர்

றார் அதிரடியாக.

**பா**.ம.க தலைவர் டாக்டர் ராமதாஸ் ஏற்கெனவே 'தொண்டன்', 'பாலம்' உள்ளிட்ட படங்களிலும் பழ. நெடுமாறன் 'தென்றல்' படத்திலும் நடித்துவிட்டனர். இவர்கள் எல்லாம் எங்கே உள்ளே வந்துவிடுவார்களோ என்கிற பயத்தில் நடிகர் சங்க உறுப்பினர்களின் பி.பி. தொடிக்குநொடி எகிறிக் கொண்டிருக்கிறது. இது குறித்து நம்மிடம் பெயர் சொல்ல மறுத்துவிட்டுப் பேசிய மூத்த உறுப்பினர் ஒருவர்,

''அரசியல் மேடையில் தம்மை எதிர்த்துப் பேசி வரும் விஜயகாந்துக்கு கவுன்ட்டர் தரும் விதமாக, நடிகர் சங்கத் தலைவர் தேர்தலில் திருமாவளவனை இறக்கிவிட்டு, அவருக்கு தங்கள் கட்சியின் ஆதரவைத் தந்து விஜயகாந்தின் மூக்கை உடைக்கத் தயாராக இருக்கிறார் கலைஞர். ஆகவே திருமாவளவன் போட்டியிட அதிக வாய்ப்புகள் இருக்கின்றன'' என்றார்.

**ச**ரி, இது குறித்து விடுதலை சிறுத்தைகள் வட்டாரத்தில் என்ன சொல்கின்றனர்?

''குஷ்பு மேட்டர்ல ஒரு தெளிவான கருத்தை தலைவர்ங்கற முறையில விஜயகாந்தால தர முடியலை. இதே எங்க தலைவரா இருந்தா பளிச்னு பேசியிருப்பாரு. அப்படித் தெளிவாக முடிவெடுக்க முடியாத ஒருவர் கட்சித் தலைவர் மற்றும் சங்கத் தலைவர் பதவியை வகிக்கறப்போ, எங்க தலைவரால ஏன் ரெண்டு தலைமையைச் சமாளிக்க முடியாது?'' என்று கேள்வி எழுப்பியவர்கள்,

''தற்போதுள்ள விதிமுறைகளை மாற்றாத வரையில் அய்யா, திருமாவளவன் உள்ளிட்டோர் நடிகர் சங்கத்துக்குள் நுழைவதைத் தடுக்க முடியாது. அதேசமயம் விதிமுறைகளை மாற்றினால், அது இப்போது சங்கப் பதவிகளில் இருக்கும் பலருக்கும் ஆபத்தாக முடியும். ஆகவே, தற்போது இருதலைக்கொள்ளி எறும்பாகவே தவித்து வருகிறது நடிகர் சங்கம்'' என்றனர்.

எனது தொழில் அல்ல!''

**உங்கள் நண்பரான தங்கர்பச்சான் அப்படியொரு கருத்தைக் கூறியிருக்கிறாரே...?**

''தங்கர்பச்சான் தமது விருப்பத்தைக் கருத்தாகத் தெரிவித்திருக்கிறார். அவர் தவிர, எங்கள் நண்பர்கள் பலரும் நடிகர் சங்கத்துக்குள் இருக்கின்றனர். ஆகவே அவர்களுக்கு நான் உள்ளே வரவேண்டும் எனத் தோன்றி, அவர்கள் வலியுறுத்தும் பட்சத்தில் இதுபற்றி யோசிக்கலாமே ஒழிய, இப்போதைக்கு அந்த எண்ணம் வரவில்லை.''

**நடிகர் விஜயகாந்த் உங்கள் அரசியல் எதிரி. அவரை எதிர்க்க இன்னொரு வழியாக நடிகர் சங்கத் தேர்தலைப் பயன்படுத்த உள்ளீர்கள் என்கிற குற்றச்சாட்டு பற்றி...?**

''நாங்கள் அரசியலுக்கு வந்தது விஜயகாந்தை எதிர்க்க அல்ல... இன்றைய சூழ்நிலையில் சில அரசியல் கருத்துகளைத் தெரிவிக்க வேண்டியதாகி விட்டது. அதற்காக வந்தோம். மேலும் விஜயகாந்தை எதிர்க்க நடிகர் சங்கத்துக்குள்ளே சென்றாக வேண்டிய அவசியமில்லை. இப்பொழுதுதான் ஒரு படத்தில் நடிக்கிறேன். அது வெளியாகி மக்கள் ஆதரவைப் பெற வேண்டும். அதற்குள் நடிகர் சங்கத் தலைவர் பதவி பற்றி யோசிக்க வேண்டியதில்லை.''

**உங்களுடைய பதில்களில் 'இப்போதைக்கு' என்கிற வார்த்தைக்கு அதிக அழுத்தம் கொடுக்கிறீர்களே... என்ன விஷயம்...?**

(நேரடியாகப் பதில் சொல்லாமல் பூடகமாய் சிரித்தபடி விடை கொடுத்தார்.)

**- இரா. முத்துக்குமார்**
படங்கள்: **ஸ்ரீஹரி**



# சின்னச் செய்திகள்

பிலிப்பைன்ஸ் மணிலா விமான நிலையம். கத்தார் ஏர்வேஸ் விமானம் ஒன்று புறப்படத் தயாராயிருக்கு. தரையைக் க்ரீச்சிட்டு உயரப் பறக்க வேண்டிய ஃப்ளைட், 'கீச்'னு சத்தம் உள்ளாற கேட்கக் கலவர மாகுது. விமான ஊழியர்கள் ஒவ்வொருத் தரும் சீரியஸா தேடுறாங்க. யாரை? உள்ள எலி ஒண்ணு ஓடுறதைப் பார்த்திருக் காங்க. அதைத்தான் தேடுறாங்க... தேடு றாங்க... பதிமூணு மணி நேரமாச்சு. தேடு றாங்க... அப்புறம் மனசைத் தேத்திக்கிட்டு முழு தைரியத்தோட எலி உள்ள இருக்கா, இல்லையான்னு குழப்பத்தோடயே விமா னத்தைக் கிளப்பியிருக்காங்க.

இவ்ளோ நேரம் தேடுனதுக்குப் பதிலா கூடவே ஒரு பூனையையும் விமானத்துல ஏத்திக் கூட்டிட்டுப் போயிருக்கலாம். இல்லாட்டி, மசால் வடையோட அங்கங்க எலிப்பொறிகளை ஃப்ளைட் முழுக்க வைச்சுக் கிளம்பியிருக்கலாம். ஹூம்... நம்ம லெவலுக்கு யார் யோசிக்கிறாய்ங்க!



• ஐயையோ மும்பை!

## உலகின் மோசமான நகரம்!

உலகின் மக்கள் வசிப்பதற்கேற்ற டாப் 10 நகரங்கள் எது எதுன்னு சிங்கப்பூரைச் சேர்ந்த பொருளாதார புலனாய்வு அமைப்பு, ஒரு லிஸ்ட்டை வெளியிட்டிருக்காங்க. அதுல நம்ம சென்னை நஹி. நம்பர் 1 சிட்டி கனடாவின் வான்கோவர். அப்புறம் ஆஸ்திரேலியாவின் மெல்பர்ன், பெர்த், அடிலெய்டு, சிட்னி. அதுக்கப்புறம் வியன்னா, ஜெனீவா, சூரிச், டொராண்டோ, கால்கெரி - இதெல்லாம் அடுத்தடுத்த இடங்கள்ல க்யூ கட்டி நிக்குது. அதே மாதிரி உலகின் மோசமான நகரங்கள் லிஸ்ட்ல (சென்னை இதுலயும் இல்லப்பா!) பங்களாதேஷ், டாக்கா, பாக். கராச்சி, இந்தியாவின் மும்பை இதெல்லாம் முன்னணி முகம் காட்டுதாம்! அப்ப சென்னைய நகரமா கருதலியா!?

சென்னை அசோக்நகர் சந்திரன் தியேட்டர்ல டிக்கெட் வாங்கி (ப்ளாக்ல இல்ல!), ராமதாஸ், 'சிதம்பரத்தில் ஒரு அப்பாசாமி' படத்தை போன வாரம் பார்த்தாராம். வெளிய வந்து 'நல்ல படம்'னு கமெண்ட் கொடுத்தாராம். அது சரி... அந்த 'கிளுகிளு' பாட்டு வர்றப்போ, ராமதாஸ் வெளிய பாப்கார்ன் சாப்பிட வெளிநடப்பு செஞ்சிருப்பாரோ? ('ராம்', 'தாஸ்' படங்கள் பார்த்தீங்களா ராமதாஸ் சார்?) ●



கல்கி
அடுத்த இதழ்...
ஷக்கலக்க
ஷாப்பிங் ஸ்பெஷல்!
வாங்க...வாங்க...
ஆசைதாங்க!




## ஜெ : வழக்கிலே பின்னடைவு; கணக்கிலே முரண்பாடு!

**வ**ரப்போகிற தேர்தலையொட்டி தமது கட்சிக்கு மக்கள் ஆதரவைப் பெருக்க முதல்வர் ஜெயலலிதா பல காரியங்களைச் செய்து வருகிறார். அவற்றில் ஒன்று சென்னை நேரு ஸ்டேடியத்தில் நடைபெற்ற விவசாயிகள் மாநாடு.

விவசாயிகளிடம் தேர்தலையொட்டி திடீர் பரிவு ஒரு புறமிருக்க, "நேரு ஸ்டேடியத்தில் விளையாட்டுகள் தவிர வேறு எந்த நிகழ்ச்சியும் நடத்தக் கூடாது" என்ற தமது 1998 நிலையிலிருந்து முற்றிலும் மாறுபட்டு இன்று நிற்கிறார் ஜெயலலிதா. பொது நிகழ்ச்சிகளால் ஸ்டேடியமும் விளையாட்டுத் திடலும் பாழ்பட்டுப்போகும் என்று உச்ச நீதிமன்றம் வரை சென்று அன்று வாதாடி வெற்றி பெற்றவர், இன்று அதே நேரு ஸ்டேடியத்தில் விவசாயிகள் மாநாடு அறிவித்து பெரும் கூட்டம் சேர்த்திருக்கிறார். இதற்கு தி.மு.க. தரப்பில் எதிர்ப்பு கிளம்பியதும் அவசரம் அவசரமாக செப்டம்பர் 29ம் தேதி ஒரு அரசாணை பிறப்பித்து விதிமுறைகளைத் தளர்த்தியிருக்கிறார். மேலும் ஒரு கண் துடைப்பாக, இது விவசாயிகள் மாநாடு மட்டுமல்ல; அத்துடன் கிராமப்புற விளையாட்டுகளுக்கும் இடமுண்டு என்று அறிவித்திருக்கிறார்.



கல்கி



2005 அக்டோபர் 16
பார்த்திப புரட்டாசி 30
மலர் : 64
இதழ் : 11




இதனை எதிர்த்து ஒரு பொது நல வழக்கு தொடுத்தார் கராத்தே நிபுணர் செந்தில்குமார். இதை விசாரித்த சென்னை உயர் நீதிமன்றம் வழங்கியுள்ள தீர்ப்பு, விவசாயிகள் மாநாட்டுக்குத் தடை விதிக்கவில்லை. இது முதல்வருக்கு ஒரு வெற்றி போலத் தோன்றலாம். ஆனால் தீர்ப்பில் கூறப்பட்டுள்ள விவரங்களை கவனமாகப் படித்தால், தமிழக முதல்வருக்கு இது வெற்றிபோல் தோற்றமளிக்கும் படுதோல்வியே என்பது விளங்கும்.

தன் தீர்ப்பில் உயர்நீதி மன்றம் பின்வரும் விஷயங்களைத் தெளிவுபடுத்தி யுள்ளது :

- 1998ல் வழங்கப்பட்ட உச்சநீதிமன்றத் தீர்ப்பு இன்றைக்கும் செல்லுபடியாகும்.
- ஸ்டேடியம் அரசுக்கு சொந்தம் என்பதால் அங்கே அரசு விழாக்கள் நடத்தலாம் என்ற கருத்து தவறானது.
- விளையாட்டுப் போட்டிகள் மட்டுமே அங்கு நடைபெற வேண்டும்.
- இந்த நிபந்தனைகளைத் தளர்த்தி அரசு பிறப்பித்த செப்டம்பர் 29ம் தேதி அரசாணை செல்லாது. அதை உயர்நீதி மன்றம் ரத்து செய்கிறது.
- கிராமப்புற விளையாட்டுகளுக்கும் இடமிருப்பதால் மாநாடு நடத்த உயர்நீதி மன்றம் அனுமதி வழங்குகிறது.
- ஆனால் அதே நேரத்தில் மாநாடு நடத்தப்படும்போது விளையாட்டுத் திடலும் விளையாட்டு அரங்கமும் பாழாகாமல் பாதுகாக்கப்பட பல கட்டுப்பாடுகளை நீதிமன்றம் விதிக்கிறது.

இந்தக் கட்டுப்பாடுகளை உயர்நீதி மன்றம் பட்டியலிட்டு உள்ளது. ஆக மொத்தத்தில் இந்தத் தீர்ப்பு அ.தி.மு.க. அரசுக்கும், அ.தி.மு.க. தலைவருக்கும் மிகப் பெரிய பின்னடைவே. தோல்வி என்றே கூறலாம்.




தமிழக சட்டமன்றத் தொடர் அண்மையில் நடைபெற்றபோது ஏற்பட்ட அமளி துமளிகள் காரணமாக, அங்கு சமர்ப்பிக்கப்பட்ட பிரதம கணக்காயர் அறிக்கை போதிய கவனத்தைப் பெறாமல் போய்விட்டது. பா.ம.க. தலைவர் ராமதாஸ், மேற்படி அறிக்கை, அரசின் செயல்பாட்டில் உள்ள குற்றம் குறைகளை சுட்டிக் காட்டியுள்ளதைப் பிட்டுப் பிட்டு வைத்திருக்கிறார்.

அவற்றுள் ஒன்று அதிர்ச்சி அளிப்பதாக உள்ளது. ஒரு தனியார் மின் உற்பத்தி நிறுவனம் சார்பில் தமிழ்நாடு மின் வாரியம் ரூ.40.19 கோடி வருமான வரி செலுத்தியிருக்கிறதாம்! மக்களை கசக்கிப் பிழிந்து வசூலிக்கப்படும் மின் கட்டணங்களும் வரிப்பணமும் இப்படியா வீணடிக்கப்படுவது?

வேறுபல முறைகேடுகள் நடந்திருப்பது குறித்தும் பிரதம கணக்காயர் அறிக்கை பட்டியலிட்டுக் காட்டியிருப்பதை ராமதாஸ் விளக்கிக் கூறி, தமிழகத்தின் நிதி நிலைமை தற்போது ரொம்ப திருப்திகரமாக இருப்பதாக முதல்வர் கூறுவது முற்றிலும் முரண்பாடானது என்று வாதித்திருக்கிறார்.

போதாக்குறைக்கு முதல்வரின் செல்லத் திட்டமான சைக்கிள் அன்பளிப்பு திட்டம் மாநில அரசின் திட்டமாக இருக்கலாம்; ஆனால் அதற்கு மத்திய அரசின் உதவியைத்தான் மாநில அரசு நாடியது; மத்திய அரசும் ரூ.14 கோடி கடனும் ரூ.6 கோடி மானியமும் வழங்கி உதவியுள்ளது என்று தயாநிதி மாறன் குட்டை உடைத்திருக்கிறார்.

மத்திய அரசோ, மாநில அரசோ எல்லாமே மக்களுக்கு நன்மை செய்வதற்காக, மக்களால் உருவாக்கப்பட்டவைதாம். எனவே யாருடைய திட்டம், யார் பணம் கொடுத்தது என்பதெல்லாம் முக்கியம் அல்ல. மக்களின் வரிப்பணம்தான் அது! ஆனால் எல்லாமே "அம்மா"வின் தயாளகுணத்தாலும் திறமையாலும் மக்களுக்குக் கிடைப்பவை என்ற மாயையை உருவாக்க நினைப்பதுதான் பரிதாபத்துக்குரியது. ●

# தீப்பிடிக்கும் தீபிகா!

"பதினான்கு வயது தீபிகா ஸ்குவாஷ் கோர்ட்டில் ஆடும்பொழுது தீப்பொறி பறக்கிறது" என்கிறார்கள் விளையாட்டு விமர்சகர்கள். ஸ்குவாஷ் விளையாட்டில் ஜோஸ்னா சின்னப்பாவுக்கு அடுத்து உலக அரங்கில் வெளுத்துக் கட்டும் இன்னொரு தமிழ்நாட்டுப் பெண். அவரிடம் ஒரு சிட் சாட்.

**அறிமுகம்**

எட்டு வயசுல, டென்னிஸ் ஆட அனுப்பினாங்க. ஆனா எனக்கு அதைப் பிடிக்கவேயில்லை. என் ஃப்ரெண்ட் ஒருத்தி ஸ்குவாஷ் விளையாடறதைப் பார்த்து எனக்கும் இதுல ஆசை வந்தது. அப்படியே படிப்படியா வளர்ந்து வளர்ந்து... இப்போ கலக்கறோம்ல!



**சாதனை**

ப்ரெஞ்ச் மற்றும் டச் ஓபன் ஜூனியர் போட்டிகளில் நான்தான் ஜூனியர் சாம்பியனாக்கும். இதைப் பார்த்து நிறைய ஸ்பான்சர் ஓடி வர்றாங்க. இன்னமும் ஆதரவு வேணும். ஸ்குவாஷ் பணக்கார விளையாட்டில்லையா?

**ஆங்கிலம்**

ஆங்கிலம்தான் என் தொடர்பு மொழி. அப்பா சிந்தி. அம்மா கேரளா. நான் பிறந்தது தமிழ்நாட்டுல. ஆனா எனக்கு இந்த மூணு மொழியும் உருப்படியா தெரியாது. பே... பே... பே... தான்.

**சானியா**

எனக்கு டென்னிஸ் பிடிக்காட்டியும் சானியாவை ரொம்ப ரொம்ம்ம்ப்ப்பப் பிடிக்கும். அவங்க பேர், புகழ், திறமையெல்லாம் பார்த்தா ஆசை ஆசையா இருக்கு. ஒலிம்பிக்ல தங்கம் ஜெயிச்சுட்டா, எனக்கும் இப்படி மவுஸ் கிடைக்காதா என்ன?

**பொழுதுபோக்கு**

ஸ்குவாஷ் விளையாட்டே பொழுதுபோக்குதானே. இங்க்லீஷ் படங்கள் பார்த்தா எனக்கு, பூவாவே வேண்டாம்.

**பெருமை**

வெளிநாடுகளில் ஆடப் போகும்போது 'தீபிகா ஃப்ரம் இந்தியா'ன்னு சொல்லும்போது உடல் கொஞ்ச நேரம் சிலிர்த்துக்கும். இந்த உணர்வே என்னை வழிநடத்திச் செல்லும்னு நம்பறேன்.

- சநகன்

அட்டை, படங்கள் : அஜீத்

# குரோர்பதியில் கேப்டன்!

அமிதாப்பின் 'குரோர்பதி'யில் இது நடிகர்கள் பங்குபெறும் காலம். புதிதாக கட்சி ஆரம்பித்துள்ள நடிகர் விஜயகாந்தை, குரோர்பதிக்கு அழைக்கிறார் அமிதாப். தமது கட்சித் தொண்டர்களை ஊர் ஊராகச் சென்று தரிசித்த கையோடு குரோர்பதி ஸ்டுடியோவுக்கு வந்துவிடுகிறார் கேப்டன். நிகழ்ச்சி ஆரம்பமாகிறது.

**அமிதாப் :** *(பார்வையாளர்களைப் பார்த்து)* இன்றைக்கு நமது குரோர்பதி நிகழ்ச்சியில் கலந்து கொள்ளப் போகிறவர் உங்கள் அனைவருக்கும் நன்கு அறிமுகமான தமிழ்நாட்டுச் சிங்கம், கறுப்பு எம்.ஜி.ஆர்., கேப்டன் என எல்லோராலும் அழைக்கப்படும் விஜய காந்த். வெல்கம். வெல்கம்! *(என்று கூறி கைகளைத் தட்டுகிறார்)*

**கேப்டன் :** *(இரு கரங்களையும் கூப்பியவாறு வந்து...)* எல்லோருக்கும் வணக்கம்.

**அமிதாப் :** உட்காருங்க கேப்டன்ஜி.

**கேப்டன் :** ஒரு திருத்தம். என்னை கேப்டன்னு மட்டும் கூப்பிடுங்க. பின்னாடி 'ஜி' சேர்க்க வேணாம்.

கலகல...



**அமிதாப்** : 'ஜி'ங்கறது மரியாதையான வார்த்தைதானே கேப்டன்ஜி.

**கேப்டன்** : இருக்கலாம். ஆனா அது அஜீத் நடிச்ச படத்தோட பேரு. நீங்க அப்படி கூப்பிட்டா விஜயகாந்த், அஜீத் ரசிகர்களோட ஓட்டுக்களை வாங்க நினைக்கிறாரு. அதனாலதான் 'ஜி'யை சேர்த்துக்கிட்டாருன்னு சில பேர் பொய்ப் பிரசாரம் செய்து என்னோட அரசியல் பிரவேசத்தைத் தடுக்க சதி செய்வாங்க. இந்த கேப்டனுக்கு யார் தயவும் தேவையில்லை. ஜி, சின்னு எதுவும் இல்லாமலேயே ஜெயிச்சுக் காட்டுவேன்.

**அமிதாப்** : கம்ப்யூட்டரை கூட 'ஜி'ன்னு கூப்பிட்டே பழகிப் போச்சு. அதனால 'ஜி' போடாம பேசறது கஷ்டம்தான். இருந்தாலும் உங்களுக்காக முயற்சி பண்றேன். நீங்க இந்த நிகழ்ச்சியில கலந்துக்கறது சந்தோஷமான விஷயம்.

**கேப்டன்** : நான் மத்தவங்களை மாதிரி கலந்துககலாமா வேண்டாமா, ஜெயிப்போமோ தோற்போமான்னு பயந்துக்கிட்டு இருக்க மாட்டேன். ஒரு முடிவை எடுத்துட்டா பின்வாங்க மாட்டேன். 'வடநாட்டு நடிகர்-நடிகைகளே இதுல கலந்துக்கறாங்க. நாம அவங்களுக்குக் குறைஞ்சவங்க இல்லைன்னு நிரூபிக்கணும். அது உங்களால தான் முடியும். நீங்க கலந்துக்கங்க'ன்னு என்னோட ரசிகர்களும், நண்பர்களும் தொடர்ந்து வற்புறுத்தினாங்க. இதுல நான் கலந்துக்கிட்டது தமிழுக்குக் கிடைச்ச பெருமை. தமிழ்நாட்டுக்குக் கிடைச்ச பெருமை. ஒவ்வொரு தமிழனுக்கும் கிடைச்ச பெருமை. இன்னிக்கு உலகம் முழுக்கத் தமிழன்தான் ஜெயிச்சுக்கிட்டு இருக்கான். செஸ்னு சொன்னா விஸ்வநாதன் ஆனந்த், ரேஸ்னா நாராயண் கார்த்திகேயன், சினிமான்னா ஷியாமளன்... இப்படிச் சொல்லிட்டே போகலாம். அது மட்டுமில்லாம...

**அமிதாப்** : (தனக்குள்) ஐயையோ! என்னை இவர் பாட்டுக்கு மூச்சுவிடாம பேசிட்டே இருக்காரு. நடுநடுவுல பிரேக் விட்டாத் தானே விளம்பரங்களைப் போட முடியும். நாலு காசை பார்க்க முடியும்... கெடுத்துடு வாரு போலிருக்கே.

**கேப்டன்** : என்ன அமிதாப் சார் யோசிக்கறீங்க? பேச்சு மட்டும் பெருசா இருக்கு. திறமை எப்படியோன்னுதானே நினைக்கறீங்க? நான் இந்த நிகழ்ச்சியில கலந்துக்கப்போறது தெரிஞ்சதும் சில பேர் கேலி செய்தாங்க. இவருக்கு என்ன தகுதி இருக்குன்னு கேட்டாங்க. இந்த மதுரைக்காரன் தகுதி இல்லாத காரியத்துல இறங்க மாட்டான். இது ஒண்ணும் எனக்குப் புதுசில்லை. படிக்கறப்பவே வாத்தியார் கேட்கற கேள்விங்களுக்கு டக் டக்குன்னு பதில் சொல்வேன். அவரு வேற பையனைக் கேட்டாலும் நான்தான் எழுந்து சொல்வேன். கேள்வியே கேட்காம சும்மா இருந்தாலும் விடமாட்டேன். நானே கேள்வியைக் கேட்டு பதிலும் சொல்வேன்.

**அமிதாப்** : கரெக்ட்தான். நான் ரெண்டு வரி பேசினாலும் ஒரு பக்கத்துக்குப் பேசறீங்க. சும்மா இருந்தாலும் ஒரு பக்கத்துக்குப் பேசறீங்க. சரி விடுங்க. நிகழ்ச்சிக்குப் போவோம். இந்தப் போட்டியில உங்களால ரெண்டு கோடியை ஜெயிக்க முடியும்னு நினைக்கறீங்களா?

**கேப்டன்** : தமிழன் நினைச்சா நடக்காதது எதுவுமே இல்லை. ஏன்னா...

**அமிதாப்** : ஐயையோ... கேப்டன், எல்லார்கிட்டேயும் கேட்கிற கேள்வியை வாய் தவறி உங்ககிட்டே கேட்டுட்டேன், மன்னிச்சுடுங்க. நீங்க மறுபடியும் பேச ஆரம்பிச்சுடாதீங்க. கேட்கிற கேள்விகளுக்கு பதில் சொல்ல மட்டும் வாயைத் திறங்க ப்ளீஸ்.

**கேப்டன்** : ஒண்ணு தெரிஞ்சுக்கங்க அமிதாப். எனக்கு பேராசை கிடையாது. இந்தப் போட்டியோட எல்லா கேள்வியிலும் நான் கலந்துப்பேன். ரெண்டு கோடியில பத்து சதவீதமாவது ஜெயிப்பேன்.

**அமிதாப்** : அது எப்படி? *(சட்டென்று உஷாராகி)*



எப்படியோ இருந்துட்டுப் போகட்டும். உடனே நீங்க பேச ஆரம்பிச்சுடாதீங்க. முதல் கேள்வியைக் கேட்கலாமா?

**கேப்டன்** : அதுக்கு முன்னாடி நான் உங்களை ஒரு கேள்வி கேட்கட்டுமா?

**அமிதாப்** : நீங்க கேட்கறீங்களா? அப்போ பரிசை யார் தர்றது? சரி. கேளுங்க.

**கேப்டன்** : இந்த நிகழ்ச்சியில வசதியானவங்களே கலந்துக்கறாங்க. ஏற்கெனவே லட்சாதிபதியாவும், கோடீஸ்வரனாவும் இருக்கறவங்களையே கோடீஸ்வரனாக் கறீங்க. தெருக்கோடியில இருக்கிற ஏழை, கடைசி வரைக்கும் அங்கேயேதான் இருக்கணுமா? *(ஆவேசத்தில் கண்கள் சிவக்கிறது)*

**அமிதாப்** : அ... அப்படியெல்லாம் இல்லை கேப்டன். இது பொது அறிவு நிகழ்ச்சி. பொது அறிவு இருக்கிற யார் வேணும்னாலும் கலந்துக்கலாமே.

**கேப்டன்** : என்ன பொது அறிவு? பொது அறிவுன்னா எல்லோருக்கும் பொதுவான விஷயமா இருக்கணும். நீங்க கேட்கிற கேள்வி கார்ப்பரேஷன் ஸ்கூலுல படிச்சவனுக்கும் புரியணும். ஊட்டி கான்வென்ட்ல படிச்சவனுக்கும் புரியணும். ஆனா இங்கே அப்படியா நடக்குது?

**அமிதாப்** : கோ... கோவப்படாதீங்க கேப்டன். எ.. எப்படி கேள்விங்களைக் கேட்கணும்னு சொ... சொல்லுங்க.



**கேப்டன்** : நாள் முழுக்க உழைச்சுட்டு வீட்டுக்குப் போற தொழிலாளிக்கு ஒரே பொழுதுபோக்கு டீவியும் சினிமாவும்தான். அதுல இருந்து கேளுங்க.. 'செல்வி' சீரியலுல ராதிகாவின் தோழியா வரும் நடிகை யாருன்னு கேளுங்க. ராஜ் டீ.வி.யில 'இந்தியன்' படத்தை இதுவரை எத்தனை முறை போட்டிருக்காங்கன்னு கேளுங்க. கே. டீவியில ஒரு நாள்ல போடுற படங்களோட எண்ணிக்கை எத்தனைன்னு கேளுங்க. நடிகை சிம்ரனுக்குப் பிறந்த குழந்தை எதுன்னு கேளுங்க.

**அமிதாப்** : இருங்க... இருங்க... மத்த கேள்விங்க ஓ.கே. சிம்ரன் கேள்வியை எப்படிக் கேட்க முடியும்? ஏன்னா ஒரு கேள்விக்கு நாலு ஆப்ஷன் கொடுக்கணும். இதுல எப்படி முடியும்?

**கேப்டன்** : ஏன் முடியாது? இப்ப நான் கேட்கட்டுமா? நடிகை சிம்ரனுக்குப் பிறந்த குழந்தை எது? a) ஆண் b) பெண் c) ஆண் இல்லை d) பெண் இல்லை

*(பார்வையாளர்கள் பக்கமிருந்து கைத் தட்டலும் விசில் சத்தமும் வர, கேப்டன் பெருமிதப் புன்னகையுடன் அமிதாப்பைப் பார்க்கிறார்)*

**அமிதாப்** : ஆகா! கேப்டன்ஜி. உங்க திறமையே திறமைதான். நீங்க இந்த குரோர் பதியில ஜெயிக்கலைன்னாலும் அரசியல்ல கண்டிப்பா ஜெயிப்பீங்க.

**கேப்டன்** : போதும். தமிழ்ல எனக்குப் பிடிக்காத இன்னொரு வார்த்தை புகழ்ச்சி. நீங்க கேள்வியை ஆரம்பிங்க.

**அமிதாப்** : இனிமே எங்கே ஆரம்பிக்கிறது? டைம் ஓவர். பேசிப் பேசி களைச்சுப் போய் இருப்பீங்க. இந்தாங்க இந்த பெப்சியைக் குடிச்சுட்டு கிளம்புங்க. நான் வீட்டுக்குப் போய் ஒரு வாரம் ஏ.சி. ரூமை விட்டு வெளியே வராம இருந்து காதுங்களுக்கு ஓய்வு கொடுக்கணும். ஒரு வருஷத்துப் பேச்சை ஒரு மணி நேரத்துல காதுக்குள்ளே திணிச்சுக்கிட்ட மாதிரி பயங்கர அடைப்பு.

*(இரண்டு காதுகளையும் இரண்டு கைகளால் பொத்தியவாறு அமிதாப் வெளியேறுகிறார்).*

கற்பனை : **குசும்புராஜ்**



# மழை

படம் விட்டு வீட்டுக்கு வந்தப்புறமும் காது சரியா கேக்கல. என்னா காரணமா? எல்லாம் ஜெயம் ரவி, வில்லன்களோட 'ஹேய்...' 'ஹேய்...' சத்தத்தாலதான். மென்மையாத்தான் ஆரம்பிக்கிறாய்ங்க... ஆனா முடிக்கும்போதுதான் ரத்தக் களறியாய்டுது!

தெலுங்கு 'வர்ஷம்' படத்த தமிழ்ல எடுங்க சார்னா, அப்படியே மறுபடி தெலுங்குலதான் எடுத்திருக்காரு டைரக்டரு அண்ணாச்சி. கதாநாயகி நினைக்கும்போதெல்லாம் மழை வருது! ஆஹா! கற்பனை சுகமாத்தான் இருக்கு. அத அப்படியே ஸ்க்ரீன்ல வடியவிட்ட ஒளிப்பதிவாளர் ராஜேஷ் யாதவ வலிக்கற வரை கைகுலுக்கலாம்.

'ஜெயம்' ரவி ஆக்ஷன்ல அடி பின்றாரு. ஆனா எத்தனை நாளைக்குத்தேன் எல்லா படத்துலயும் சதா உருமிக்கிட்டே இருக்கிறது...? வெரைட்டி வேணாமா? என்ன எடிட்டர் மோகன் சார், சன்னுக்குக் கொஞ்சம் அட்வைஸ் பண்ணுங்க.

ஸ்ரேயா, தோகையில்லாத அழகு மயிலு. ஏன் இவர தமிழ் சினிமா அதிகம் பயன்படுத்தலன்னு தெரியல. ஒரு வேளை சம்பளம் ஜாஸ்தியோ!

பாட்டுங்க பாக்கறதுக்கு நல்லாவே இருக்கு. செட்டிங்லாம் கூட தான். ஆனா இதுலயும் இருப்பியும் தெலுங்கு வாசனை.

திரைக்கதைல நிறைய ஓட்டைங்க சாமி. அதையெல்லாம் படம் பார்க்க வர்றவங்களே அடைச்சிக்கட்டும்னு விட்டுட்டாங்க போல! படம் முடியறதுக்குள்ள நம்ம கண்ல மழை வந்துடுது! இந்தப் படம் வரும்னு தெரிஞ்சுதான் யாரோ ஒரு இங்கிலீஷ்கார புண்ணியவான் இப்படி ஒரு பாட்டை எழுதி வச்சாரு... 'ரெயின் ரெயின் கோ அவே.'



# கஜினி

காதலியக் கொன்னவனைப் பழி வாங்கற ஓல்டு டைப் கதைதான் கண்ணு. அதை மோல்டு பண்ண விதம்தான் சூப்பரு. 'என்னா ஸ்க்ரீன் ப்ளே மச்சி'ன்னு தியேட்டர்ல ரசிகனுங்க கமெண்ட் அடிச்சிக் கேட்டு எத்தன நாளாச்சு! இந்தப் படம் பார்க்கும்போது காது குளிரக் கேட்டோமுல்ல!

சூர்யாவா அது! இன்னா உடம்பு. இன்னா பெர்மாமென்ஸு! கலக்கிட்டே சரவணா! வூட்ல அப்பாருகிட்ட சொல்லி திருஷ்டி சுத்திப் போடச் சொல்லுப்பா. அசினு மட்டும் இன்னாவாம்! லவ், காமெடின்னு பிச்சுப்புட்டாங்க பிச்சி. அம்மணிக்கு நடிக்கக்கூட தெரியும் போலிருக்கே. நயன்தாரா ஓ.கே. ஆனா உடம்பைக் குறைக்கணும். இல்லாட்டி பேஜார்தான்.

ரொம்ப அட்டகாசம் பண்ணியிருக்கறது டைரக்டரு முருகதாஸுதான். 'ரமணா'வுக்கு அப்புறம் இடைவெளி பெருசுன்னாலும் பேச வச்சுட்டாரு படத்த. நிறைய லாஜிக் மீறல்கள் இருந்தாலும் அதெல்லாம் படத்தோட சுவாரஸ்யத்துல காணாமப் போயிடுது.

ஹாரிஸ் ஜெயராஜ் பின்னணிலதான் முன்னணி. அப்ப பாட்டுங்க? 'சுட்டும் சுடர் விழி' மட்டும் தேறுது. சினிமாட்டோகிராபி யாரு, நம்ம ஆர்.டி.ராஜசேகர் அண்ணாச்சியா? பிரமாண்டமா படைச்சிருக்காரு ஒவ்வொரு ஷாட்டையும்.

கடேசி வரைக்கும் சஞ்சய் ராமசாமிதான் தன்னோட லவ்வர்னு தெரியாம அசின் செத்துப் போறது படா சோகம்பா. ரசிகனுங்க அல்லாரும் அழாத குறைதான் போ. படம் திடீர்னு முடிஞ்சி போறாப்பல ஒரு ஃபீலிங் வருது லாஸ்ட்ல. பட், அது வெறும் ஃபீலிங்தான்!

- லஜ்ஜாவதி

# வாரம் ஒரு வாசகர் குடும்பம்

**வி**ழுப்புரத்திலிருந்து நகரப் பேருந்தில் பயணித்துக் கொண்டிருந்தோம். செம்மார் எனும் கிராமத்தை நெருங்கிக் கொண்டிருந்தது பேருந்து. ஒரு வளைவில் வந்தது ஊராட்சி ஒன்றிய நடுநிலைப் பள்ளி.

அதன் காம்பவுண்ட் சுவர் தாண்டி, ஓங்கி ஒலித்துக் கொண்டிருந்தது ஓர் ஆசிரியையின் குரல். பழக்க தோஷத்தில் செவிகளைக் கூர்மையாக்க, "காஞ்சிபுரம் மாவட்டத்தின் கடைகோடியில் இருக்கிறது நெடுங்கல் கிராமம். ஒரே ஒரு மினி பஸ் மட்டும்தான். நெடுங்கல் ஊராட்சி, தூய்மையான கிராமமாக தமிழக அரசால் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளது..." தொடர்ந்து ஒலித்த வண்ணமிருக்கிறது அந்தக் குரல். அட...! சமீபத்திய கல்கி இதழொன்றில் இடம்பெற்றிருந்த கட்டுரையின் வாசகங்கள் அல்லவா இவை! வகுப்பறைக்குள் கல்கியா? ஆச்சரியத்துடன் பஸ்ஸிலிருந்து இறங்கி பள்ளிக்குள் நுழைந்தோம். ஒரு மர நிழலில் தன்னைச் சுற்றிலும் மாணவ, மாணவிகள் வட்டமடித்து அமர்ந்திருக்க, பாடம் நடத்திக் கொண்டிருந்த அந்த ஆசிரியையின் கரங்களில் கல்கி.

திடீரென வருகை தந்திருக்கும் பள்ளி ஆய்வாளர் என நம்மை எண்ணிவிட்ட ஆசிரியை, சடாரென எழுந்து "வகுப்பில் பாடங்களைத் தவிர, நம்மைச் சுற்றிலும் நடக்குற நல்ல விஷயங்களை மாணவ - மாணவிகளுக்குச் சொல்றது என்னோட வழக்கம்!" என்றார். கல்கியிலிருந்து வந்திருக்கிறோம் என்றவுடன், முகத்தில் ஆயிரம் வாட்ஸ் பிரகாசம்.

**சா**லாமேடு கிராமத்தின் காமராஜ் நகரில் வசித்து வருகிறார் ஆசிரியை சாந்தி. கணவர் ராஜேந்திரன், பெரிய செவலை சர்க்கரை ஆலையில் வேலை பார்த்து வருகிறார்.



* குடும்பத் தலைவியாக...

மகன் கிருஷ்ணராஜ் ஆறாம் வகுப்பும், மகள் சுப்ரியா நான்காம் வகுப்பும் படிக்கிறார்கள். அன்பு ததும்பும் அளவான குடும்பம். மாடி வீட்டில் வசித்து வரும் பேராசிரியர் இளம் குரிசில் என்பவரது மூன்று வயதுச் சுட்டிப் பையன் ஹரிஹரன், எப்போதும் இருப்பது இவர்கள் வீட்டில்தானாம். அவனை விடாப்பிடியாக வீட்டுக்கு அழைத்துப் போக மாடிப் படிகளிலிருந்து இறங்கி வந்த பேராசிரியர் இளம் குரிசில், நம்மைப் பார்த்ததும் பேசினார்.

"இப்ப இவுங்க கணவன் - மனைவி ரெண்டு பேருமே வேலைக்குப் போய் சம்பாதிக்கிறாங்க. அதனால வாரந்தவறாம கல்கி வாங்கறது பெரிய விஷயம் இல்லீங்க. ஆனா, அஞ்சு வருஷத்துக்கு முன்



● ஆசிரியையாக...!

# உலகைப் பார்க்க உதவிய ஜன்னல்!

ளாடி இத்தம்மாவுக்கு வேலை இல்ல. அப்ப அவருக்குச் சர்க்கரை ஆலையில கம்மி சம்பளம்தான். அந்தக் குறைவான சம்பளம் வாங்கின வருடங்களிலும் வாரந் தவறாம கல்கி வாங்கிடுவாங்க. எனக்கே ஆச்சர்யமா இருக்கும். அதுதாங்க பெரிய விஷயம்" என்றார்.

பத்தாம் வகுப்புப் படித்துக் கொண்டிருந்தபோதே கல்கி வாசகியாய் அடியெடுத்து வைத்துவிட்டாராம் சாந்தி.

"கட்டின புதுசுல கழுத்துக்கு நகை வாங்கித் தாங்கன்னுதான் பெண்கள் கேட்பாங்கன்னு நான் கேள்விப்பட்டிருக்கேன். ஆனா சாந்தி என்ன கேட்டாங்க தெரியும்ங்களா? அந்த வருஷம் கல்கி பொன் விழா ஆண்டு. கல்கி பொன் விழா மலர் வாங்கித் தாங்கன்னு கேட்டாங்க. இப்படியொரு வித்தியாசமான மனைவி" என்று பூரிக்கிறார் கணவர் ராஜேந்திரன்.

"மனசு துயருறும் வேளைகளில் எல்லாம் பொன்னியின் செல்வனை வாசிப்பேன். புத்துணர்வு கிடைச்சுடும்.

94ம் வருஷம், பையன் பிறந்து ஆறு மாதத்தில், தொடர்ந்து இரண்டு வருடங்களா எனக்கு ஒரே வயிற்றுப்போக்கா இருந்தது. அவ்வாறு உடல்நிலை மோசமாகிப் போகும்போதெல்லாம் கல்கியின் படைப்புகளை எடுத்துவைத்து வாசிப்பேன். படித்துக் கொண்டிருக்கும்போதே உயிர் பிரிந்து விட்டால்கூட மகிழ்ச்சியே என்று நினைத்துக் கொள்வேன். அந்த வயிற்றுப்போக்குக்கு எங்கெல்லாமோ சென்று ஏராள பணச் செலவில் வைத்தியம் பார்த்தோம். எதற்கும் அடங்கவில்லை அது. கடைசியாக வேப்பிலைக் கொழுந்துக்கு அடங்கிப் போனது அந்த வயிற்றுப்போக்கு. பதினான்கு வயதிலிருந்து தொடர்ந்து கல்கி வாசித்து வருகிறேன். அன்றிலிருந்து என் உலகை கல்கி என்கிற ஜன்னல் வழியாகத்தான் பார்க்கிறேன். கல்கியில் உளவியல் ரீதியாக மிகச் சிறந்த தொடர் சூர்யாவின் பர்சனல் டைரி!" என்கிறார் சாந்தி.

- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு




# தோல்விகள் என் தோழர்கள்!

நண்பன் என்னும் அசைக்க முடியாத நம்பிக்கையோடு கைகுலுக்க ஆசையோடு நெருங்கியவனை, கன்னத்தில் அறைந்து 'ஹலோ' சொன்னால் எப்படியிருக்கும்? அப்படியொரு எதிர்பாராத அதிர்ச்சி, என் கையைப் பிடித்துக் குலுக்கிவிட்டு 'சூப்பரா சொதப்பீட்டிங்க சார்' என்று சொன்ன முதல் ரசிகர் மூலம் என்னைத் தாக்கியது. திமுதிமுவென்று வந்த மற்ற ரசிகர்களை எதிர்கொள்ள பயந்து, தியேட்டரின் அலுவலக அறைக்குள் தஞ்சம் புகுந்தேன். 'நம்மை ஒரு நடிகனாகப் பார்த்து சகித்துக்கொள்கிற மனநிலையில் ரசிகர்கள் இல்லையா? நாம் நடிக்க வந்ததே தவறோ' என்று குழம்பிக்கொண்டிருந்தவன், மதிய உணவை மறந்துவிட்டு, பிற்பகல் காட்சியில் ரசிகர்களோடு ரசிகராக அதே தியேட்டரில் உட்கார்ந்து படம் பார்க்க ஆரம்பித்தேன். இதுவரை குரூப் போட்டோவில், பள்ளி, கல்லூரிக்காக எடுக்கப்பட்ட பாஸ்போர்ட் சைஸ் போட்டோக்களில் மட்டுமே பார்த்துப் பழக்கப்பட்ட என் முகத்தை, எழுபது எம்.எம். சினிமாஸ்கோப் திரையில், பிரம்மாண்ட க்ளோஸ்அப்பில் டப்பிங் வாய்ஸ், பின்னணி இசை சேர்ப்பு சகிதம் உயிருடன் பார்த்தபோது பிரமிப்பாக இருந்தது.

நான் அறிமுகமாகும் காட்சியில், முதலில் முகத்தைக் காட்டாமல், வாஷ்பேஷனில் எனது வாட்ச்சைக் கழற்றி வைக்கிற மாதிரி முதல் ஷாட் எடுத்திருந்தார் இயக்குனர். அந்த ஷாட் திரையில் வந்தபோதே ஓரே விசில்! நான் திரையில் எப்படி இருக்கப் போகிறேன் என்று பார்க்கும் எதிர்பார்ப்பு. எனது முகம் தெரிந்ததும் தியேட்டரே கைதட்டலில் கிடுகிடுத்தது. 'இன்னும் நாம் டயலாக் பேசவில்லை. அதற்குள் கைதட்டுகிறார்களே' என்று சிலிர்த்தேன். அதன்பிறகு படம் முடிகிற வரை பல இடங்களில் எனக்குக் கைதட்டல்கள். 'நமக்குச் சம்பந்தமே இல்லாத ஆயிரம் பேர் நம்மைப் பாராட்டுகிறார்களே!' என்று கண்ணீர் முட்டிக்கொண்டு வந்தது! அந்த கணத்தில் வஸந்த் சார் மீது இருந்த மரியாதை மேலும் கூடியது.

'சினிமாவே தெரியாத என்னை செங்கல் செங்கல்லாக வைத்துக் கட்டி, ஒரு கோபுரமாக அல்லவா மாற்றியிருக்கிறார். நம்மிடம் எவ்வளவு எதிர்பார்த்திருக்கிறார். ஆனால், நாம் என்ன செய்து கிழித்திருக்கிறோம்.' என்னை நினைத்து எனக்கே வெட்கமாக இருந்தது. எந்தக் காட்சியில் நான் நன்றாகச் செய்யவில்லையோ, அப்போதெல்லாம் ரசிகர்கள் கிண்டலும் கமெண்ட்டுமாக சிரித்தபோதுதான் புரிந்தது, சினிமா பார்த்துவிட்டு நாம் எவ்வளவு பேரைக் கிண்டலடித்திருக்கிறோம் என்பது! அதெல்லாம் எத்தனை அறியாமை!

படம் முடிந்து மன நிறைவோடு வீடு வந்து சேர்ந்தபோது... கோயமுத்தூரிலிருந்து ரசிகர்களின் போன். ''நல்ல பண்ணியிருக்கீங்க... சூர்யா?'' ''நீங்க எப்படி நடிக்கிறீங்கன்னு செட்டுக்கு வந்து, உங்களுக்குத் தெரியாம, உங்க அப்பா மறைஞ்சு நின்னு பார்க்கிறாரோங்கிற மாதிரி உங்க

முகத்துல அப்படியொரு பய்ம்?" - இப்படி சில ரசிகர்கள்... "சூர்யா தொப்புள் வரைக்கும் எதுக்கு பேன்ட் போடுறீங்க! ஹிப்புல நிக்கிற மாதிரி போடுங்க மிஸ்டர்!"

"ஹலோ! என்ன இவ்ளோ கருப்பா இருக்கீங்க! உங்கள டார்க் ஹேண்ட்சம்னு சொல்லலாமா?"

- இப்படி சில ரசிகைகள்... எல்லோரும் பட்பட்டென்று மனதில் பட்டதை போட்டுடைத்தார்கள். நிறைந்த மனதோடு அன்றைய இரவு முடிந்து விடிந்தபோது கனடா, லண்டன், அமெரிக்காவிலிருந்தெல்லாம் அழைப்புகள். இருபத்து நான்கு மணி நேரத்துக்குள் சினிமாவின் வீச்சு எத்தனை பெரியது என்று தெரிந்துகொண்டதும், வஸந்த் சாரை மனசுக்குள் விஸ்வரூபமாய் வரித்துக்கொண்டேன். அவர் மட்டும் இல்லையென்றால் எனக்கு இப்படியொரு வாழ்க்கை கிடைத்திருக்குமா? முதல் படத்திலேயே காதல், டூயட், ஆக்ஷன் என்று எல்லா உணர்ச்சிகளாலும் என்னை ஒரு நடிகனாக முன்னிறுத்திய அவரை, எனது இன்னொரு தாய் என்று சொன்னால் அதில் தவறில்லை! வேறு ஏதோ ஒரு படம், ஏதோ ஒரு இயக்குனர் என்றால், கண்டிப்பாக அப்பா பெயரைக் கெடுத்திருப்பேன். எனது சினிமா வாழ்க்கை மொட்டிலேயே கருகி உதிர்ந்திருக்கக் கூடும்.



'நேருக்கு நேர்' நூறுநாள் வெற்றிப் படமாக அமைந்துவிட்டது. அடுத்து 'காதல் கோட்டை' எனும் மாபெரும் வெற்றிப் படத்தை எடுத்த சிவசக்தி பாண்டியன் தயாரித்த 'காதலே நிம்மதி' படத்தில் நடிக்கக் கூப்பிட்டார்கள். அவரது நிறுவனத்தின் பெயரைத் திரையில் பார்த்தாலே ரசிகர்கள் மத்தியில் விசில் பறக்கும். தரமான வெற்றிப் படங்களைக் கொடுத்த நிறுவனம் என்பதால் தயங்காமல் இறங்கினேன். புது இயக்குனர். காதலிக்காமலேயே காதலின் கொடுமைகளை அனுபவிக்கிற இளைஞன், யுவதியின் கதை. இருபது நிமிடம்தான் கதை சொன்னார் இயக்குநர். "இது எல்

லாமே ட்ரீட்மெண்ட் சார்... ஷூட்டிங் ஸ்பாட்டில் பார்த்துக்கொள்ளலாம்'' என்று வாயடைத்து விட்டார்.

படப்பிடிப்புக்குப் போனாலோ பெரிய அதிர்ச்சி! டயலாக் பேப்பரைக் கையில் கொடுத்து நடிக்கச் சொன்னார்கள். நேருக்கு நேரில் எனது ஒவ்வொரு அசைவையும் சொல்லிக் கொடுக்க வஸந்த் இருந்தார். இங்கே கையை நீட்டிப் பேசுவதா, நீட்டாமல் பேசுவதா என்பதுகூட தெரியாமல் நெளிந்தேன். "என்ன சார்! வஸந்த் சார் படத்திலேயே நடிச்சிட்டீங்க. இதெல்லாம் உங்களுக்கு ஒண்ணுமேயில்லை'' என்றார்கள். அவர்களது எதிர்பார்ப்பு நியாமானதுதான். ஆனால், இரண்டாவது படத்துக்கு நாம் முழுமையாகத் தயாராகவில்லை என்பதை உணர்ந்ததும் உள்ளுக்குள் உதறலெடுத்தது.

சண்டைக் காட்சிகளில் முழுவீச்சோடு காலைத் தூக்கி உதைக்கத் தெரியவில்லை. டான்ஸ் பிடிபடவில்லை. காஸ்ட்யூமும் செலக்ட் பண்ணத் தெரியவில்லை. 'அய்யோ! இவையெல்லாம் அடிப்படையான விஷயங்கள். இவற்றைக் கற்றுக்கொள்ளாமல் தப்புப் பண்ணி விட்டோமோ' என்று என் இயலாமையை நினைத்துத் தடுமாறினேன். அந்தப் படத்தில் என்னோடு நடித்த நாசர் சார் எனக்கு நிறைய உதவியதால் ஒருவழியாகச் சமாளித்து படத்தை முடித்து நிமிர்ந்தால், முதுகில் அறைந்தது முதல் தோல்வி!

• 'சந்திப்போமா'



திரையுலகில் நீண்ட தூரம் போக நினைக்கிற எனக்கு, உதவி செய்கிற கதையாக 'காதலே நிம்மதி' அமையவில்லை. அடி வாங்கும் ஹீரோவை ரசிகர்கள் அடியோடு வெறுத்தார்கள். நல்ல பாட்டு, நகர வாழ்க்கை, கொஞ்சம் ஃபாண்டஸி என்று ஜனரஞ்சகமாக இருக்கட்டும் என்று அப்பா கதை கேட்டு ஓ.கே சொன்ன மூன்றாவது படம் சந்திப்போமா. "இந்த ஷாட்டில் உள்ளே நுழைகிறீர்கள்! இடப்பக்கம் திரும்பிப் பார்க்கிறீர்கள்'' என்று இயக்குனர் ஒவ்வொரு காட்சியையும் ஸ்டோரி போர்டில் ஓவியமாகக் காட்டியபோது நம்பிக்கை வந்துவிட்டது.

ஆனால் முதல்நாள் படப்பிடிப்பில் எனக்கு அழுகை வராதது மட்டும்தான் பாக்கி. லண்டனிலிருந்து வந்திருந்த புது இயக்குனர், சவுண்ட், ஸ்டார்ட் கேமரா சொன்ன பிறகுதான் 'ஆக்ஷன்' சொல்ல வேண்டும். எடுத்ததுமே அவர் 'ஆக்ஷன்' என்று குரல் கொடுத்ததும் மொத்த யூனிட்டும் அதிர்ந்து போய்விட்டது. "நடிப்பு பத்தாது. இன்னும் கொஞ்சம் எமோஷன் கொடுங்க" என்று கெஞ்சவே ஆரம்பித்துவிட்டார். எனக்கு நடிப்புச் சொல்லிக் கொடுத்து என்னிடம் வேலை வாங்குகிற நிலையில் அவர் இல்லை. ஷூட்டிங் முடிந்து வீடு வந்ததும், 'இந்தப் படம் வேண்டாம். நான் இதில் நடிக்க மாட்டேன்' என்று அப்பாவிடம் சண்டை போட்டேன். "கைநீட்டி அட்வான்ஸ் வாங்கியாச்சுப்பா! இனிமே முடியாதுப்பா" என்று மறுத்துவிட்டார்.

எலிப்பொறியில் சிக்கிய முயல் மாதிரி இமிறவும் முடியாமல், நிமிரவும் முடியாமல் தவித்த எனக்கு, அந்தப் படத்தின் ஒளிப்பதிவாளர் ரத்னவேல்தான் உதவி செய்தார். நான் தவித்துத் தடுமாறுகிற தருணங்களில் எல்லாம் ஒரு நல்ல நட்பு கை கொடுக்கிறதே என்கிற ஆறுதலோடு அந்தப் படத்தில் நடிக்க ஆரம்பித்தேன். பாடல் காட்சி படப்பிடிப்புக்காக டெல்லி சென்றோம். அங்கே முடித்துவிட்டு நேரே

ஜெய்ப்பூர். அங்கிருந்து எண்பது கிலோமீட்டர் தூரத்தில் இருந்த ஜோத்பூர் நகரில் முகாமிட்டோம். ஜோத்பூரில் மட்டும் பத்துநாள் ஷெட்யூல். கடைசி நாள் ஷூட்டிங் முடிந்து கிளம்பலாம் என்றால், "சாரி தம்பி! சாப்பாடு போடு கிறோம். சாப்பிட்டுட்டு இங்கேயே இருங்க. உங்க முதலாளி ஊருக்குப் போய் பணம் புரட்டி வந்து லாட்ஜிங் பில்லைக் கட்டட்டும். அப்புறம் ஊருக் குப் போகலாம்'' என்று ஹிந்தியில் ஹோட்டல்காரர்கள் மிரட்டினார்கள். கிட்டத்தட்ட ஹவுஸ் அரஸ்ட் மாதிரி தான். சும்மாயில்லை! பத்துநாள் ரூம் வாடகை பாக்கி. அப்புறம் விமானக் கட்டணத்துக்கு எங்கே போவது?

தயாரிப்பாளர் புதியவர் என்பதால், ஏட்டமிட்டதைவிட அதிகம் செலவாகி விட்டது. நீங்கள் மட்டும் ஊருக்குப் புறப் படுங்கள் என்று எல்லோரும் என்னை வற்புறுத்தினார்கள். மொத்த யூனிட்டை யும் விட்டுவிட்டு நான் மட்டும் எப் படிக் கிளம்புவது? மறுத்துவிட்டேன். அங்கிருந்தபடியே எங்களின் தவிப்பை அப்பாவிடம் போன் செய்து சொன் னேன். எப்படியாவது பணம் புரட்டி எங்கள் எல்லோருக்கும் சென்னை விமான நிலையத்தில் கட்டி விடுங்கள். பணம் கட்டிய பில்லை எனக்கு ஃபேக்ஸ் செய்தால் போதும் என்றேன். பாவம்! பணம் புரட்ட அப்பாவுக்கு இரண்டு நாட்கள் ஆகிவிட்டது. அவர் அனுப்பிய ஃபேக்ஸை பெற ஜோத்பூரில் வசதி இல்லாததால், ஜெய்ப்பூருக்கு வந்து அதை பெற்றுக்கொண்டு, பாக் சிறையிலிருந்து மீண்ட கைதிகளைப் போல சென்னை வந்து சேர்ந்தோம். இதுபோல் எதிர் பாராத திருப்பங்கள் நிறைந்த 'சந்திப் போமா' படம் ஒருவழியாக முடிந்து ரிலீ ஸானது. ரிசல்ட்?

படுதோல்வியைச் சந்தித்தது அந்தப் படம். 'சந்திப்போமா' படத்தின் நாயகி ப்ரீதாவுக்குத் தெரிந்த டான்ஸ்கூட எனக் குத் தெரியவில்லை. 'சூர்யா டான்ஸ் ஆடு வதைத் தவிர்த்துவிடுவதே அவருக்கு நல் லது' என்று கல்கியில் வந்த விமர்சனத் தைப் படித்து மனம் நொந்துபோனேன். இத்தனை வெளிப்படையான பத்திரிகை



விமர்சனங்களைச் சந்திக்க வேண்டுமா என்று திகைத்தேன். இரண்டு படங்கள் சரியாக ஓடவில்லை என்றவுடன் இன் டஸ்ட்ரியில் யாருமே மதிக்கவில்லை. சிவகுமார் மகன் என்றாலும், நடிக்கத் தெரியணும், படம் நன்றாக ஓட வேண் டும். ஓடுகிற படத்தில் நாம் இருக்க வேண் டும். அப்போதுதான் முகம் கொடுத்தே பேசுவார்கள் என்ற நிலை. கார்மெண்ட் தொழிலையும் விட்டுவிட்டு வந்தாகி விட்டது. அங்கேயும் திரும்பப் போக முடியாது. திரும்பிப் போனால் சினி மாவில் தோற்றுப் போய்விட்டேன் என்று ஒப்புக்கொள்ள வேண்டும். திடீரென்று எனக்குள் ஒரு மின்னல்! தோல்விகளைக் கண்டு எதற்கு நடுங்க வேண்டும்? தோல்விகளைத் தவிர்க்கத்தானே உழைக்க வேண்டும். தோல்விகள் பாடம் கற்றுத்தரும் தோழர்கள் என்றாலும் லட் சக்கணக்கில் பணம் விரயமாகும் காஸ்ட்லி லெஸன்களாக அவை இனி இருக்கக்கூடாது என்று முடிவு செய்தேன். அந்த நேரத்தில் ஒரு ரயில் பயணம். என் திரை வாழ்க்கையைத் தலைகீழாய்த் திருப்பிப் போட்ட திருப்புமுனைப் பயணம் அது...

(டைரியைத் தொடர்வேன்...)

சென்னைக்கு லேட்டாக வந்தாலும் லேட்டஸ்ட்டான துணி வகைகளோடு அசத்திக் கொண்டிருக்கும் போத்தீஸ் டெக்ஸ்டைல்ஸ், முதன்முதலில் 1930களில் ஸ்ரீவில்லிபுத்தூரில் ஆரம்பிக்கப்பட்டது. மூன்றாவது தலைமுறையாக போத்தீஸ் நிறுவனத்தை வழிநடத்திச் செல்கிறார் அதன் நிர்வாக இயக்குனர் ரமேஷ்.

"இதே தொழிலில் ஈடுபட அடுத்த தலைமுறையும் ரெடி. ஆனால், நான்தான் நடுவில் 'இந்தத் தொழிலே வேண்டாம். பாம்பேவுக்கு ஓடிப் போகிறேன்' என்று வீட்டில் அடம் பிடித்தேன்" என்று சிரிக்கிறார்.



* ரமேஷ்

# "ஜவுளித் தொழிலே வேண்டாமென்றேன்!"

ஸ்ரீவில்லிபுத்தூர், திருநெல்வேலி, சென்னை என மூன்று நகரங்களிலும் கிளைகள் கொண்ட போத்தீஸின் வாழ்க்கையை, அதன் வழியே கூற ஆரம்பித்தார்...

## ஸ்ரீவில்லிபுத்தூர்

எங்கள் மூதாதையர்கள் பாண்டிய, சோழ, திருவாங்கூர் போன்ற அரச பரம்பரையிலிருந்து வந்து நெசவுத் தொழிலில் ஈடுபட்டவர்கள். வெறும் நெசவு செய்து கொண்டிருந்தால் மட்டும் போதாது, முறையாக வியாபாரமும் செய்ய வேண்டும் என்கிற உந்துதலில், என் தாத்தா போத்தி மூப்பனார் அவர்களால் விதையிடப்பட்டு, 200 சதுர அடியிலுள்ள முனிசிபல் கட்டடத்தில்தான் முதல் கடை தொடங்கப்பட்டது.

அப்போதெல்லாம் உடலை மறைக்க ஒரு துணி வேண்டும், அவ்வளவுதான். பெண்களுக்குக் கண்டாங்கி சேலையை விட்டால் வேறு வழி கிடையாது. போர்க் காலங்களில் பணம் கொடுத்தாலும் அவ்வளவு சுலபத்தில் துணி கிடைக்காது. இப்படியே தட்டுத் தடுமாறி மேலே வந்த போது, அப்பா சடையாண்டி மூப்பனார் கடையை மேலும் விரிவுபடுத்தி, 1977ல் போத்தீஸ் துணிக் கடைக்கு புதுப் பொலிவை ஏற்படுத்தினார். அந்தச் சமயத்தில் துணி வகைகளில் மாற்றம் ஏற்பட்டது. ஜப்பானிலிருந்து நைலக்ஸ், ப்ராஸோ சேலைகள் இந்தியாவுக்குள் நுழைந்தன. இதை சூரத்தில் காப்பி அடித்து, மில் செக்டரில் பல மாற்றங்களைக் கொண்டு வந்தார்கள். பட்டுப் புடவைக்கு பதிலாக ரிப்பன் பார்டர் உள்ள விஸ்கோஸ் காட்டன் கலந்த



# சக்சஸ் ஸ்டோரி



புடைவைதான் பெண்களின் ஃபேஷனாக இருந்தது. ஆண்களுக்கு பெல் பாட்டம் பேன்ட்! அதில் பாட்டம் எவ்வளவுக்கெவ்வளவு பெரிதாக உள்ளதோ, அந்தளவுக்கு அம்மனிதர் நாகரிகமானவராக கருதப்பட்ட காலம் அது!

## திருநெல்வேலி

**நா**ன் பிறந்து வளர்ந்ததெல்லாமே ஸ்ரீவில்லிபுத்தூரில்தான். மதுரை அமெரிக்கன் கல்லூரியில் பி.காம் முடித்த பின்பு முழுமையாக என்னை வியாபாரத்தில் ஈடுபடுத்திக் கொண்டேன். நான்தான் வீட்டின் தலைப்பிள்ளை. எனக்குக் கீழே நான்கைந்து டிக்கெட்டுகள் இருந்தன. 82ம் வருடம், 'எனக்கு டெக்ஸ்டைல் தொழிலே வேண்டாம். நான் பாம்பே சென்று வேறு ஏதாவது தொழில் செய்து பிழைத்துக் கொள்கிறேன்' என்று பாம்பேவுக்குச் செல்ல ஆயத்தமாகிவிட்டேன். ஆனால் அப்பாவும் அம்மாவும் என்னிடம் அழுது, 'நீ வேறு தொழிலில் ஈடுபடக்கூடாது. நீ போய்விட்டால் குடும்பம் நிலைகுலைந்து போய்விடும்' என்று சென்டிமென்டாக மடக்க, சரி என்று அதன்பின் அப்பாவுடன் இணைந்து இன்னும் தீவிரமாகத் தொழிலில் ஆர்வம் காட்டினேன்.

அப்பொழுது சென்னைக்கு அடுத்ததாக, துணி வியாபாரத்தில் திருநெல்வேலியின் கை ஓங்கியிருந்தது. திருநெல்வேலி, நாகர்கோவில், தூத்துக்குடி என்று மூன்று மாவட்ட மக்களும் ஜவுளி எடுக்க திருநெல்வேலிக்குத்தான் வருவார்கள். அருகிலுள்ள கேரள ஊர்களிலிருந்தும் மிகுதியாக இங்குதான் வருவார்கள். கல்யாணம், காட்சி என்றாலும் நேரே இங்கேதான் ஓடி வந்துவிடுவார்கள். சரி, அடுத்த அடியை இங்கு எடுத்து வைப்போம் என்று 1986ல் முப்பது லட்சம் முதலீட்டில் (இன்றைக்கு இதெல்லாம் கொசுறு) போத்தீஸை ஆரம்பித்தோம். நான்கைந்து வருடங்களிலேயே மக்கள் மனதிற்குள் புகுந்து விட்டோம். இந்தச் சமயத்தில் சென்னை எங்களை அழைப்பது போல் ஓர் உணர்வு ஏற்பட்டது.

## சென்னை

**செ**ன்னையில் நாங்கள் காலடி எடுத்து வைக்கும்போது, சாதகமாகச் சில விஷயங்களும் பாதகமாகப் பல விஷயங்களும் எங்களை வரவேற்றன. அப்போதைய மக்கள் தொகை அறுபது லட்சம். தீபாவளி, பொங்கல் என்றில்லாமல் சாதாரணமாகத் துணி வாங்குவது என்றால்கூட தி.நகருக்குத்தான் ஓடோடி வருவார்கள். இப்படி



## ஓ.எஸ்.மணியன்

இதுநாள் வரை முதல்வர் ஜெயலலிதாவின் தேர்தல் பிரசாரப் பயணத் திட்டத்தை வகுப்பதில் செங்கோட்டையனே முழுக்க முழுக்க ஈடுபடுவார். ஆனால் இந்த முறை அது இருவர் கொண்ட குழுவுக்கு மாற்றப்பட்டுவிட்டது. அந்த இன்னொரு நபர் அ.தி.மு.க.வின் கொ.ப.செ. ஓ.எஸ்.மணியன்.

யொரு சூழல் இருக்கும்போது வியாபாரத்தில் நீங்கள் எந்த வொரு புதுமையையும் தைரியமாகச் செய்யலாம். ஆனால், ஏற்கெனவே தி.நகரில் பல ஜாம்பவான்கள் இத்தொழிலில் ஈடுபட்டிருக்கும்போது, நாம் எப்படி பூஜ்ஜியத்திலிருந்து ஆரம்பித்து நீண்ட தூரம் போவது என்கிற தயக்கம் இருந்தது.

சென்னையில் கடை வைக்கலாம் என்கிற எங்களின் முயற்சி, ஏழு வருட போராட்டங்களுக்குப் பிறகுதான் நிஜமானது. பல சந்தர்ப்பங்கள் கை நழுவிப் போக, சரி, சென்னையே வேண்டாம் என்றிருந்தபோதுதான் உஸ்மான் ரோடு சந்திப்பில் ஓர் இடம் விற்பனைக்கு வந்தது. இம்முறை அனைத்தும் சாதகமாக நிகழ, சென்னையில் பிரம்மாண்டமாக தொடங்கியது போத்தீஸ்.

தமிழ்நாடு என்றில்லாமல் உலகம் முழுக்க உள்ள தமிழர்கள் தங்கள் வீட்டில் விசேஷம் என்றால், துணி எடுக்க நேராக சென்னை கிளம்பி வந்து விடுகிறார்கள். நாங்கள் வந்த புதிதில் இங்கே எதுவெல்லாம் எங்கள் போட்டியாளர்களின் மைனஸாக இருந்ததோ, அதையெல்லாம் எங்கள் ப்ளஸ்ஸாக்கிக் கொண்டோம். மக்கள் மனதில் 'போத்தீஸ்' என்கிற பெயரை பதியவைக்க விளம்பரங்களை நாடினோம். இப்பொழுது போத்தீஸை தெரியாதவர்களே கிடையாது என்கிற நிலைமைக்கு வந்துவிட்டோம். இங்கே ஒன்றை நான் சொல்லியாக வேண்டும்.

இன்றைக்கு இட்டத்தட்ட அனைத்து துணிக் கடைகளும் அளவுக்கு மிஞ்சிய விளம்பரங்களைச் செய்து வருகிறோம். போட்டி மனப்பான்மை காரணமாக யாராலும் இதை நிறுத்த முடியவில்லை. டர்ன் ஓவரில் 2 சதவீதம் விளம்பரங்களுக்குச் செலவழித்தால் போதுமானது. ஆனால் 4% - 5% வரைக்கும் விளம்பரங்களுக்கான செலவு அதிகரித்துக் கொண்டே போகிறது.

தரம், ரகங்கள், விலை குறைவு - இதுதான் எந்தவொரு வியாபாரத்துக்குமான தாரக மந்திரம். என்னதான் கோடியாகக் கொட்டி விளம்பரங்கள் செய்தாலும் இந்த மூன்று விஷயங்களும் சரியாக அமைந்தால்தான் வியாபாரத்தில் ஜெயிக்க முடியும்.

துணி உடுத்துவது என்பது உடலை மறைக்க மட்டுமல்ல... அது நம் மனதில் தன்னம்பிக்கையை ஊற்றெடுக்கும் அற்புத சக்தி. நன்றாக ட்ரெஸ் செய்துகொண்டு கண்ணாடி முன்பு நின்று பாருங்கள், உடலில் புது மின்சாரம் பாய்ந்து கொண்டிருக்கும். இன்னும் சொல்லப் போனால், ஒருவர் உடை அணியும் விதத்தை வைத்தே அவர் எப்படிப் பட்டவர் என்று கூறிவிடலாம்.

பெரும் திரளாக மக்கள் கூட்டம் போத்தீஸுக்குள் காலடி எடுத்து வைக்கும்போது, நான் ஏதோ சாதித்துவிட்டதாக நினைப்பதேயில்லை. சாதாரண குக்கிராமத்தில் பிறந்து முட்டிமோதி போராடி இன்று அமெரிக்காவிலுள்ள மைக்ரோ சாஃப்ட் நிறுவனத்தில் பணிபுரிந்து, அமெரிக்கர்களின் கண்ணுக்குள் விரலைவிட்டு ஆட்டுகிறார்கள் நம் தமிழக இளைஞர்கள். என்னை அண்ணாந்து பார்ப்பவர்களுக்கு மத்தியில் நான் வியந்து பார்ப்பது அந்த இளைஞர்களைத்தான்."

- ச.ந.கண்ணன்

படங்கள் : ஸ்ரீஹரி

# உண்மையான விருது எது?



• சில்வியா

‘வேர்ல்டு காங்கிரஸ் ஆன் ஹோலிஸ்டிக் மெடிசின்’ என்கிற அமைப்பு கல்வி, மருத்துவம் உள்ளிட்ட துறைகளில் தன்னலமற்ற சேவை புரிவோருக்கு ஆண்டுதோறும் விருது வழங்கி கௌரவித்து வருகிறது. செயின்ட் ஜோன்ஸ் பள்ளியின் முதல்வர் சில்வியா ரெஜினால்டு, இவ்வமைப்பிடமிருந்து ‘வித்யாபூஷன்’ விருதை இவ்வருடம் பெற்றிருக்கிறார். சந்தோஷத்திலிருந்தவரை சந்தித்தோம்.

"எங்கப்பா அடிக்கடி சொல்வங்க... விருதுங்கறது தானா தேடி வரணும்னு... அவங்க சொன்ன மாதிரியே இந்த விருது நான் அப்ளை பண்ணாமலே எனக்குக் கிடைச்சிருக்கு. இது என்னைப் போன்ற ஆசிரியர்களுக்கு ஒரு உற்சாக டானிக்..." என்று பூரிக்கும் சில்வியா, தமது இருபத்தேழாண்டு கால ஆசிரியர் பணி அனுபவத்தில், நல்ல மாணவன், நல்லாசிரியர் யார், ஆசிரியர் மாணவர் உறவு எப்படி இருக்க வேண்டும் என்பது குறித்தெல்லாம் பேசினார்.

"ஒரு மாணவனுக்குப் படிப்பைவிட முக்கியமானது பழக்க வழக்கங்கள். அதைவிட முக்கியம் நல்ல நட்பு வட்டம். இது ரெண்டும் சிறப்பா அமைஞ்சா, நிச்சயம் அவன் நல்ல மாணவனாகிடலாம். ஆசிரியர்களுக்கு மாணவர்களிடம் நேர்த்தியா பழகுற தன்மை வேணும். அவரைப் பார்த்துப் பழகின மாத்திரத்துல அவரைத் தன்னுடைய ரோல் மாடலா நினைக்கிற அளவுக்கு இருக்கணும். நிச்சயம் இந்தத் துறைக்கு மனரீதியான ஆர்வத்தோடு வரணும். ஆனா இந்த நிலைமை இப்போ குறைஞ்சிருக்கு" என்று வருத்தப்படுபவர்,

"ஓர் ஆசிரியர் தமது மாணவர்களின் பெயர், குடும்பம் உள்ளிட்ட விவரங்களை விரல் நுனியில் வைத்திருக்க வேண்டும். அதன்படி ஒரு மாணவரை அவர் பெயர் சொல்லி அழைக்கும்போது, ‘தன்னை ஆசிரியர் தனிப்பட்ட முறையில் கவனிக்கிறார்... அன்பு செலுத்துகிறார்’ என்கிற உணர்வு மாணவனுக்கு ஏற்படும். இதனால் அவனது கல்வி ஆர்வம் மேம்படும்" என்கிறார்.

இளைஞர்களின் கவனத்தைச் சிதறடிக்கும் இன்டர்நெட் உள்ளிட்ட சில பொழுதுபோக்கு அம்சங்களின் அதிகரிப்பைக் கண்டிப்பவர், "பெற்றோர்கள் இந்த விஷயத்தில் மிகுந்த கண்டிப்புடனும், பொறுப்புடனும் மாணவர்களிடம் செயல்பட வேண்டும். அவர்கள் நல்லவிதமாக முன்னேறி வாழ்ந்து காட்டும் போதுதான் உண்மையான விருதை நாங்கள் உணர்கிறோம்" என்றார் முத்தாய்ப்பாக.

- கோகிலா

## வெற்றி உங்கள் சாய்ஸ்! 10



அந்தக் கல்லூரிப் பேராசிரியருக்குத் திடீரென்று நெஞ்சு வலிப்பது போல இருந்தது. டாக்டரிடம் போனார். அவரைப் பரிசோதித்துவிட்டு, "எதற்கும் ஒரு ஈ.சி.ஜி எடுத்து விடுங்கள்" என்றார் டாக்டர். ஈ.சி.ஜி ரிப்போர்ட் அவருக்கு இதயத்தில் பிரச்னை என்று சொல்லி விட்டது. இதய நிபுணர் ஒருவரைக் கலந்தாலோசித்த போது, "கவலையேபடாதீர்கள்! பைபாஸ் பண்ணி விடலாம்!" என்றார். உடனடியாக, பிரபலமான ஆஸ்பத்திரியில் பைபாஸ் சர்ஜரிக்கு நாள் குறித்தார்கள்.

ஆபரேஷன் தினத்தன்று, பேராசிரியரின் மகன், "பயமாயிருக்கா அப்பா?" என்று தந்தையின் கையைப் பிடித்துக் கொண்டு கேட்டான். "நோ...நோ... எவ்வளவு பெரிய டாக்டர்! அவர் தினம் ரெண்டு பைபாஸ் சர்ஜரி பண்ணுகிறாராம்! போன வாரம் கூட இந்த சர்ஜன் ஆயிரம் சர்ஜரிகள் முடித்துவிட்டார் என்று டீ.வி நியூசில் காட்டினார்களே! அமெரிக்காவில் பதினைந்து வருடங்கள் பணியாற்றின அனுபவம் கொண்டவர்! எனக்கு ஆபரேஷன் பற்றின பயமெல்லாம் துளியுமில்லை" என்றார் அப்பா.

பேராசிரியருக்கு பைபாஸ் சர்ஜரி செய்யப்போகிற சர்ஜன், நகரின் பிரபல மருத்துவராக இருக்கலாம்! ஆனால், தனிப்பட்ட முறையில் பேராசிரியருக்கு அவரைப் பற்றி ஒன்றும் தெரியாது. அந்த சர்ஜனும், அவரது குழுவைச் சேர்ந்த மற்ற டாக்டர்களுமாக கத்தியால், அவரது உடலில் ஆபரேஷன் செய்யப் போகிறார்கள். இதயம் ஒரு மனிதனுக்கு எத்தனை முக்கியமான உறுப்பு! அதில் கத்தி வைத்து ஆபரேஷன் செய்ய, மூன்றாவது மனிதர் ஒருவரை தைரியமாய் அனுமதிக்கிறார் பேராசிரியர்.

ஒரு பிசினஸ்காரருக்கு, சட்டச் சிக்கல். ஒரு வக்கீலை அணுகி, தனது பிரச்னையைச் சொன்னார். "நோ பிராப்ளம்! எல்லாவற்றையும் நான் பார்த்துக் கொள்கிறேன்" என்றார் வக்கீல். சட்ட அறிவு தனக்கு இல்லாததால், தனது சார்பில், கோர்ட்டில் ஆஜராகி வாதாட ஒரு வக்கீலை நம்பி வழக்கை ஒப்படைத்தார் பிசினஸ்மேன்.

டாக்டர் மீது நம்பிக்கை வராவிட்டால், ரிஸ்க் எடுத்து,

# புத்தர் சொல்லும்

**சனந்தாஜி**



அவரிடம் ஆபரேஷன் செய்துகொள்ள யாராவது முன் வருவார்களா?

அல்லது, இவர் நமக்கு வக்கீலாக இருக்கிற பட்சத்தில், நமது கட்சி ஜெயிப்பது நிச்சயமில்லை என்று ஒரு கட்சிக்காரர் நினைத்தால், அந்த வக்கீலிடம் போவாரா?

பேராசிரியர் சர்ஜனின் மீதும், பிசினஸ்காரர் வக்கீலின் மீதும் நம்பிக்கை வைத்துத் தத்தமது பிரச்னைகளை ஒப்படைக்கிறார்கள் என்றால் அதற்கு அடிப்படையான காரணம் என்ன? சர்ஜனும், வக்கீலும் அவரவர் துறையில் பெற்றுள்ள ஆழமான ஞானம்தானே! முறைப்படி கல்வி கற்றதால், பெற்ற ஞானம் தரும் நம்பிக்கை!

ஆனால், ஆன்மிகத் துறையிலே, ஒருவர் மீது எப்படி நம்பிக்கை வரும்? ஒவ்வொருவரும் ஒவ்வொரு பரிமாணம் பெற்றவராக மக்களுக்குத் தெரிகிறார்கள்.

ஒவ்வொருவரும் என்ன சொல்கிறார்கள் என்று பாருங்கள். ஆனால், அவர்கள் சொல்வதை எல்லாம் அப்படியே ஏற்றுக்கொண்டாக வேண்டும் என்கிற கட்டாயம் ஏதுமில்லை. இது எனக்கும் பொருந்தும்.

ஒருவர் நல்ல ஆளுமையைப் பெற்று கம்பீரமாகத் தோற்றம் தருகிறார் என்பதற்காக அவர் சொல்லும் கருத்துக்களை அப்படியே ஏற்றுக்கொண்டு விடாதீர்கள்.

ஒருவர் கவர்ந்திழுக்கும் காந்தக் குரலில் கணீரென்று சொற்பொழிவாற்றுகிறார் என்பதால், அவரது கருத்துக்களை ஏற்றுக் கொண்டாக வேண்டியதில்லை.

ஒருவருக்குப் பின்னால் ஏராளமாக சீடர்களும், பக்தர்களும் திரண்டிருக்கிறார்கள் என்பதால் அவரது கருத்துக்களை ஏற்றுக் கொண்டே ஆக வேண்டும் என்று ஒன்றுமில்லை.

இவற்றை மட்டுமே பார்த்து, ஒருவர் சொல்கிற கருத்துக்களை ஏற்றுக் கொள்ளாதீர்கள். அப்படிச்



# புத்திமதி!

செய்தால், நீங்களும் உங்கள் குடும்பமும் உங்கள் தொழிலும்கூட ஒருவேளை பாதிக்கப்படக்கூடிய அபாயம் உண்டு. எனவே கவனமாக இருங்கள்.

கம்ப்யூட்டரில் ஹார்டுவேர், சாப்ட்வேர் என்று இரண்டுவிதமான விஷயங்கள் இருப்பது தெரியும். அதுபோல நமது உடம்புக்குள்ளே இருக்கும் இரண்டு விஷயங்கள் மனமும், புத்தியும். இவ்விரண்டில், உணர்ச்சிபூர்வமாக எதையும் அணுகக் கூடியது மனசு. அறிவுபூர்வமாக எதையும் சிந்திப்பதுதான் புத்தி.

எனவே, யார் என்ன விஷயம் சொன்னாலும் அறிவுபூர்வமாக அதனைச் சிந்தித்துப் பாருங்கள். விஞ்ஞானரீதியாக, மெய்ஞான ரீதியாக, தர்க்க ரீதியாக ஏற்றுக் கொள்ளும்படியான விடைகள் கிடைத்தால் மட்டுமே, அந்த விஷயத்தை ஏற்றுக்கொள்ளுங்கள். அதாவது, 'உண்மை' என்னவென்பதை நீங்களாகவே கண்டறிய முயற்சி செய்யுங்கள்.

இதை நான் சொல்லவில்லை. கௌதம புத்தர் சொல்கிறார். இந்தக் கருத்தைக்கூட நான் 'மேற்கோள் காட்டி' சொல்கிறேன் என்பதற்காக நீங்கள் அப்படியே ஏற்றுக் கொள்ள வேண்டும் என்கிற கட்டாயமில்லை. கேள்வி கேளுங்கள். ஏற்கக்கூடிய விடை கிடைத்தால் மட்டும் ஏற்றுக் கொள்ளுங்கள்.

இங்கே இன்னொரு விஷயத்தையும் கவனத்தில் கொள்ள வேண்டும். சந்தேகங்களைக் கேள்விகளாகக் கேட்கிறபொழுது, "எனக்கு இதிலே சந்தேகம் இருக்கிறது; அதைத் தெளிவு படுத்திக் கொள்ள விரும்புகிறேன். எனவே என் மனத்தில் எழுகிற கேள்விகளை நான் உங்கள் முன் வைக்கிறேன். உங்களது ஆழ்ந்த ஞானத்தைக் கொண்டு, எனது சந்தேகங்களைத் தீர்த்து வையுங்கள்" என்கிற, உண்மையை அறிய முயலும் பணிவான அணுகுமுறை அவசியம். அப்படி இல்லாமல், "உங்கள் கருத்துக்களைச் சொல்ல உங்களுக்கு உரிமை உண்டு என்றால், அது குறித்து சந்தேகம் எழும்போது, உங்களைக் கேள்வி கேட்பது என் உரிமை. அதற்கு விளக்கம் அளித்து, எனது சந்தேகங்களைப் போக்க வேண்டியது உங்களது கடமை" என்கிற அகங்காரமான அணுகுமுறை கூடாது.

**'உண்மை என்னவென்பதை நீங்களாகவே கண்டறிய முயற்சி செய்யுங்கள்'**

ஒரு குழந்தை பிறக்கிறது. அது வளர்ந்து சிறுவனாகி, பள்ளிக்கூடத்துக்குப் போய்ப் படிக்கிறது. படிப்பை முடிக்கிறபோது, இளைஞனாகி, வேலைக்குப் போகிறான். திருமணமாகி, பிள்ளைகள் பெற்று, நடுத்தர வயதில் குடும்ப பாரம் சுமக்கிறார். வயதாகி, மூப்படைகிறார்.

குழந்தை, சிறுவனானவுடன், 'அடடே! என் குழந்தைப் பருவம் முடிந்துவிட்டதே!' என்று புலம்புவதில்லை. சிறுவன், வாலிபனாகி விட்டதற்காக வருந்துவதில்லை. இப்படியே போனால், முதியவர், 'ஐயோ! எனக்கு வயதாகி விட்டதே! நடுத்தர வயதாகவே இருந்திருக்கலாமே!' என்று அலுத்துக் கொள்வதில்லை.

இதற்கு என்ன காரணம்?

மனித வாழ்க்கையின் வெவ்வேறு கட்டங்கள் இவை. ஒரு மனிதன் ஒரே கட்டத்தில், ஆயுள் முழுக்கத் தங்கிவிட முடியாது. பிறப்பு என்றால் இறப்பு உண்டு. இரண்டுக்குமிடையே கடக்க வேண்டிய பல்வேறு கட்டங்களும் உண்டு.

இன்னும் சொல்லப் போனால், இந்த உலகில் உள்ள மக்கள் ஜாதி, மதம், இனம், மொழி, நாடு என்று பலவிதமாகப் பிரிந்து காணப்படுகிறார்கள். என்னைக்

கேட்டால், இந்த உலகத்தைப் பொறுத்த வரை இரண்டே இரண்டு பிரிவு மக்கள் தான் உண்டு. முதலாவது பிரிவு இறந்து விட்டவர்கள். இரண்டாவது பிரிவினர், இறக்கப் போகிறவர்கள்.

இன்று உயிருடன் இருக்கிற நாம் அனைவருமே இரண்டாவது பிரிவைச் சேர்ந்தவர்கள். நாம் அனைவருமே, முதல் பிரிவைச் சேர்ந்தவர்கள் ஆகிவிடுவதும் உறுதிதான்.

இந்த மண்ணில் பிறந்த அனைவருமே இந்த மண்ணிலிருந்து ஒரு நாள் போய்த்தான் ஆக வேண்டும். அது என்றைக்கு என்பதுதான் சஸ்பென்ஸ்! எந்தக் கதையிலும், எந்த சினிமாவிலும் வரும் சஸ்பென்ஸை விட சூப்பர் சஸ்பென்ஸ். வாழ்க்கை என்ற கதையின் முடிவு என்னவென்பது தெரியும். ஆனால் அது எப்போது, எப்படி நிகழும் என்று தெரியாது. இப்படிப்பட்ட கதை எழுதும் இறைவன் எத்தனை திறமையான ஒரு கதாசிரியர்!

'நான் குழந்தை'; 'நான் சிறுவன்', 'நான் வாலிபன்'; 'நான் முதியவன்' என்று ஒவ்வொரு கட்டத்திலும் மனிதன் தன்னைப் பற்றிச் சொல்கிறான். அவனது உடலில் ஏற்படும் மாற்றங்களுக்ேற்ப, அவன் தன்னை விவரிக்கும் வார்த்தையும் மாறுபட்டுக் கொண்டே வருவதை நீங்கள் கவனித்திருப்பீர்கள். ஒவ்வொரு தடவையும் குழந்தை, சிறுவன், வாலிபன், முதியவன் என்று வார்த்தை மாற்றம் நிகழ்ந்தாலும், 'நான்' என்று தன்னைப் பற்றிக் குறிப்பிடுவது மாறவில்லை என்பதையும் நீங்கள் கவனிக்கத் தவறாதீர்கள்.



ஆக, மனித வாழ்க்கை என்பது மாற்றங்களுக்குட்பட்டது. அதேசமயம் அந்த மாற்றங்களுக்கெல்லாம் அப்பாற்பட்ட ஒரு நிரந்தரமான விஷயமும் இருக்கிறது என்பதை இப்போது புரிந்து கொண்டிருப்பீர்கள்.

இந்த மனித வாழ்க்கையில் ஒரு கட்டத்திலிருந்து, இன்னொரு கட்டத்துக்குச் செல்லும் போது, அதை 'சகஜமாக ஏற்றுக்கொள்கிறான் மனிதன். ஆனால், இந்த உலக வாழ்க்கையில் எடுத்திருக்கும் பிறவியை, முன்பிறவிக்கும் அடுத்த பிறவிக்கும் இடைப்பட்ட ஒரு கட்டமாக நினைத்துக் கொள்ள ஏன் மறுக்கிறான்?

இதை நான் கேட்கவில்லை.

பகவான் கிருஷ்ணர், அர்ஜுனனிடம் கேட்கிறார்! கேட்டுவிட்டுத் தானே விளக்கம் தருகிறார்!

என்ன விளக்கம்?

(வெற்றி தொடரும்)

# கானல் வரி

## 11 ஒளிமொழி

தீ விற்றுப் பசியாறும்
சுடுமண் பரப்பில்
இப்போதும் பாடுகிறார்கள்.
தலைவர்கள் ஈர வரிகளில்
தலைவிகளின் தவிப்பு.
தகித்தெறியும் தேசத்தில்
துணையாக சுமந்து வந்த
பழஞ்சோற்றுக் குடுவையில்
துழாவிச் செய்கிறான்
கானல் நெடுங்கனவின்
கரையும் சோலைகளை
ஒரு தூரதேசத்தின்
எச்சங்கள் சுமக்கும்
பழைய உறவுகளைப் போல்
இற்று விழும் சோலைகளை
பற்றிக்கொள்ள எதையேனும்
தேடும் தன் கரங்களால்.

ஓவியம்: மருது

# எல்லோரும் சகோதரரே!



மதத்தைக் காப்பது போன்ற விஷயங்களில் அரசாங்கம் செய்வதை விட மக்களே செய்யக்கூடியதுதான் மிக அதிகம். முதலில் ஒவ்வொரு மதத்திலும் விசுவாசமாக ஒட்டிக் கொண்டிருப்பவர்கள், அம்மதத்திலுள்ள பிறரையும் தட்டி எழுப்ப வேண்டும். இதற்கு ஹிந்து மதத்திலேயே அதிகத் தேவை இருக்கிறது. ஏனெனில், பிற மதஸ்தர் யாவருமே தூங்காமல் விழிப்புடன்தான் இருந்து வருகின்றனர். இவ்வாறு எந்த ஒரு மத சமுதாயமும் முழுதாக அம்மதத்திடம் விசுவாசத்துடன் ஒழுகச் செய்ய, அந்தந்த மதத்தினரே முயல வேண்டும். மேலும், ஒவ்வொரு மதத்தினரும் பிற மதத்தினருக்கும் தமது நியாயமான உரிமைகளையும், வாதங்களையும் அன்போடு எடுத்துச் சொல்லி, அவர்களது ஒப்புதலைப் பெற முயன்று பார்க்க வேண்டும். ஏனெனில் இந்நாட்டின் பிரஜைகள் எல்லோரும் எம்மதத்தினராயினும் சகோதரச் சமூகமாகச் சேர்ந்து வாழ வேண்டியவர்கள். அப்படியின்றி மதபேத உணர்வினால் பரஸ்பர சர்ச்சையிலும் சண்டையிலும் ஈடுபட்டோமாயின், நமது சொந்த வாணாளும் வீணாகி, நாட்டின் அமைதியும் குலைவது தவிர, ஒரு பயனும் விளையாது. ஆகையால், முதற்கண் பிற மதத்தினர் என்றவுடனேயே எதிர்ப்புணர்ச்சியோடுதான் வாதிடுவது என்றில்லாமல், நேயத்துடனேயே அணுகி, தங்களுக்குள்ள நியாயமான உரிமைகளைப் பொறுமையாக எடுத்துச் சொல்லிப் பார்ப்பது என்ற மனப்பான்மையை வளர்த்துக் கொள்வது அவசியமாகும். இதற்கு நாட்டின் மிகப் பெரும்பாலோராக உள்ள ஹிந்து மதத்தோரே வழி காட்ட வேண்டும்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்

புலியைப் பார்த்துச் சிரித்தது நரி. "நீ ஐயப்பனைச் சுமப்பவனல்லவா?" என்றது. காளையைப் பார்த்து "சிவபெருமான் எவ்வளவு எடை கொண்டவர்?" என்றது. காக்கையைப் பார்த்துக் கிண்டலாக "ஏழரை ஆண்டுகள் ஆனாலும் உன் முதலாளி தொடர்ந்து உன் மீது சவாரி செய்கிறாரே" என்றது. சிங்கத்தையும் விட்டுவைக்கவில்லை. "பெயர்தான் காட்டு ராஜா. துர்க்கையிடம் அடங்கிப் போகிறாய்"

வேகமாக நரியை நெருங்கிய யானை, அதைத் தன் துதிக்கையால் தூக்கி வெளியே வீசியது. "நீ ஒரு கேடுகெட்ட மிருகம். இந்தக் காட்டில் மனிதர்களுக்குத்தான் இடம்" என்றது.

"நீங்கள் எல்லாம் மனிதர்களா?" வாய் பிளந்தது நரி.

"நீதான் சொன்னாயே. தெய்வத்திடம் அடங்கும் மிருகம் வேறென்னவாம்?" என்றது யானை.



# விலங்குகள்

## அருண் சரண்யா

அந்த நேரத்தில் ராஜன் வீட்டுக்குத் திரும்பி வருவான் என்பதை அனுஷா எதிர்பார்க்கவில்லை.

"என்ன அதுக்குள்ளே?" அனுஷா கேட்டுக் கொண்டிருக்கும்போதே ராஜன் பதில் கூறத் தொடங்கிவிட்டிருந்தான்.

"கார்த்திக் போன்ல பேசினார். சாயந்திரம் நம்மை அவங்க வீட்டுக்கு வரச் சொன்னார். அதுக்கு மேலே எதுவும் பேசாம ரிசீவரை வச்சுட்டாரு. எனக்கு வேலை ஓடலே அனு. அதான் வந்துட்டேன்."

ராஜனின் பரபரப்பு அனுஷாவையும் தொற்றிக் கொண்டது. இதுவரை கார்த்திக் தானாக ஒருமுறைகூட அவர்களைத் தொலைபேசியில் தொடர்பு கொண்டதில்லை. ஸ்ரீ பேசும்போது சில சமயம் நடுவில் அவனிடம் ரிசீவரைக் கொடுப்பாள் (திணிப்பாள்). அப்போது ஒப்புக்கு கார்த்திக் ஒரு வாக்கியங்கள் பேசுவதோடு சரி.

அப்படியிருக்க, அவன் எதற்காக இன்று தங்களை வீட்டுக்கு வரச்சொல்ல வேண்டும்? கணவன் மனைவிக்குள் ஏதாவது மோதலா?

"ஸ்ரீக்கு போன் செஞ்சு பேசினீங்களா?"

"உம். ஆனா மணி அடிச்சிக்கிட்டே இருக்கு. யாரும் எடுக்கறா மாதிரி தெரியலை" கூறியபோதே ராஜனின் நெற்றியில் சில குழப்பக் கோடுகள் உருவாகத் தொடங்கியிருந்தன.

"இருங்க, நான் ட்ரை பண்றேன்" வேகமாக தொலைபேசியின் அருகில் சென்றாள்.

சுமார் இரண்டு மாதங்களுக்கு முன் 'நான் அங்கே வருவது இவருக்கு பிடிக்கலே அக்கா' என்று தங்கை கூறியது, முதலில் அதிர்ச்சியையும் பிறகு கோபத்தையும் கிளப்பியிருந்தது. எதற்காக கார்த்திக் அப்படி எண்ண வேண்டும்? "உங்கள் தங்கையைத் திருமணம் செய்து கொடுங்கள்" என்று கேட்பதற்கு மட்டும் நாங்கள் வேண்டுமா?

மனைவிக்கு நேரடியான உறவு அவள் அக்கா மட்டும்தான் என்பது தெரிந்தும் இப்படி நடந்துகொண்டால் என்ன அர்த்தம்? வேறொன்றுமில்லை... ஒருவித உயர்வு மனப்பான்மையாகத்தான் இருக்க வேண்டும்.

தான் பெரும் புகழ் பெற்று வரும் இதய சிகிச்சை நிபுணன். ஆனால், ராஜன் வெறும் மிருக வைத்தியன்தான் என்கிற அலட்சியம். அதனால்தான் "அவர்கள் வேண்டுமானால் இங்கு வரட்டும். நீ போகவேண்டியது இல்லை'' என்று அகம்பாவச் சொற்கள்.

அதற்குப் பிறகு அங்கு போவதை பெரிதும் குறைத்துக் கொண்டால்





## ஜி.கே.மணி

**வ**ன்னிய பிரமுகர்கள் பலர் விஜயகாந்த் பக்கம் அணிவகுக்கும் நிலையில், தங்களது வன்னியர் சங்க அமைப்பு நிர்வாகிகளை அடிக்கடி சந்தித்து, அவர்களுடைய தற்போதைய பணிகள் குறித்து விசாரணை செய்து வருகிறார் பா.ம.க. தலைவர் ஜி.கே.மணி.

அனுஷா. கடைசியாகத் தங்கையை நேரில் பார்த்து இருபது நாட்கள் ஆகியிருந்தன. சென்றமுறை. போயிருந்தபோது, அவள் எதுவும் பேசாமல் பெரும்பாலும் மௌனமாகவே இருந்தது அனுஷாவுக்கு என்னவோ போல் இருந்தது.

"ஸ்ரீ, எதுக்குடீ ஒரு மாதிரி இருக்கே?"

"இல்லையே"

"கார்த்திக் உன்கிட்டே நல்லாத்தானே நடந்துக்கிறாரு?"

'ஆமாம்' என்பதுபோல்தான் ஸ்ரீலதா தலையாட்டினாள். ஆனால், எதையோ அவள் மறைப்பதாகப்பட்டது.

"இப்போ வேலைக்காரி வரும் நேரமாச்சே. நான் வேணா பாத்திரங்களை ஒழிச்சிப் போடட்டுமா?"

"வேணாம்."

"ஏன்?"

"அவ இப்பல்லாம் வர்றதில்லை."

"ஏன்? அவளா நின்னுட்டாளா? நீங்க நிறுத்திட்டீங்களா?"

"தெரியலை."

இந்த பதில் அனுஷாவைப் பளாரென்று அறைந்தது போல் இருந்தது. என்ன நடக்கிறது இந்த வீட்டில்? முதலில் சமையல்கார அம்மா, இப்போது வேலைக்காரி... ஒவ்வொருவராக பணி நீக்கம் செய்யப்படுவது தற்செயலா? அது தற்செயல் என்றால், மாற்று நபர்கள் ஏன் நியமிக்கப்படவில்லை? இதனால் இவ்வளவு பெரிய வீட்டில் தனியாக இவள் பெரும்பாலான நேரங்களில் இருக்க வேண்டி இருக்கிறதே..

சரேலென அந்தக் கேள்வி கத்தியாய் அவளுக்குள் இறங்கியது. ஒருவேளை ஸ்ரீ வேண்டுமென்றே தனிமைப்படுத்தப்படுகிறாளா?

தங்கையைத் தன் வீட்டுக்கு அனுப்ப மறுப்பது இந்த எண்ணத்தை உறுதிப்படுத்தியது.

ராஜன் சமாதானப்படுத்தினான். "நீயாக எண்ணங்களை வளர்த்துக்கிட்டு அவஸ்தைப் படாதே. எனக்குத் தெரிஞ்சு ஸ்ரீயும் கார்த்திக்கும் அன்னியோன்னியமாத்தான் இருக்காங்க. அவர் எந்த விதத்திலும் ஸ்ரீயை நோகடிப்பதாக எனக்குத் தெரியலை. அப்படி ஏதாவது இருந்தால் அவ உன்கிட்டே சொல்லாமல் இருக்கமாட்டா."

அதில் உண்மையில்லாமல் இல்லை. ஆனால், திருமணம் என்பது ஒரு பெரிய திரையை அல்லவா போட்டு விடுகிறது. கணவன் வீட்டுக் குறைகளை பிறந்த வீட்டில் சொல்லாததே பெருமை என்ற எண்ணம் அல்லவா நம் சூழலில் வளர்க்கப்படுகிறது.

ராஜனிடம் அவள் பகிர்ந்து கொள்ளாத ஒரு விஷயமும் இருந்தது. அதை நினைத்தபோது, அவள் உடலில் மயிர்க்கால்கள் குத்திட்டு நின்றன.

"அக்கா, எனக்குத் தலை வாரிவிடறியா?" என்று அன்று ஸ்ரீ கேட்க, "இதென்ன கேள்வி?" என்றபடி எண்ணெயையும் சீப்பையும் எடுத்துக் கொண்டு உட்கார்ந்தாள் அனு. சீரான அழுத்தத்துடன் அக்காவின் விரல்கள் தலைப்பகுதியில் பட, ஸ்ரீயின் உடலில் அமைதி அலைகள் இறங்கின.

சில நிமிடங்கள். ஸ்ரீலதாவின் உடல் லேசாக உதறியது. "என்ன ஆச்சு?" என்று அனு கேட்க, பதில் இல்லை. தலைவாருவதை நிறுத்திக்கொண்டு சட்டென முன்புறமாகச் சென்று தங்கையின் முகத்தைப் பார்த்தாள் அனுஷா.

எதையோ எண்ணித் தவிப்பதை

அவள் முகம் வெளிப்படுத்தியது. கண்கள் சிவந்திருந்தன.

“என்ன ஸ்ரீ? என்கிட்டே சொல்லக் கூடாதா?”

“மீன் தொட்டியைப் பார்த்தியா அக்கா?”

அட, இவ்வளவு நேரம் ஸ்ரீலதா மீன்களைப் பற்றி பேசாததே வியப்புதான். “பார்த்துட்டா போச்சு” என்றபடி புன்னகை செய்தாள் அனுஷா.

“உன்னால மீன்களைப் பார்க்க முடியாதுக்கா. அதெல்லாம் இப்போ இல்லை. வேறு ஒன்னை அதே கண்ணாடித் தொட்டியில் வளர்க்கிறாரு. அது ரொம்பப் பெரிசா இருக்கு.”

என்னவாக இருக்கும்?

மீன்தொட்டி வைக்கப்பட்டிருந்த அறைக்குள் நுழைந்தாள் அனு. தூக்கி வாரிப்போட்டது. என்ன இது!

அதற்குப் பிறகு தொலைபேசியில் தொடர்புகொண்ட போதெல்லாம் குறைவாகவே பேசினாள் ஸ்ரீலதா. “எனக்கு ஒண்ணுமில்லே. நான் நல்லாத்தான் இருக்கேன். நீ வீணா கவலைப்படாதே” என்று தங்கை கூறினால்கூட, தான்தான் எதையெதையோ குழப்பிக் கொள்கிறோமோ என்றுகூடத் தோன்றியது.

இப்போது கார்த்திக்கிடமிருந்து தன் கணவனுக்குத் தொலைபேசியில் அழைப்பு. என்னவாக இருக்கும்? தங்கைக்கு உடல்நலம் சரியில்லையா?

தொலைபேசி தொடர்ந்து ஒலித்துக் கொண்டே இருந்தது.

“நாம நேரே போய் பார்ப்போமா?”

மனைவியின் எண்ண ஓட்டத்தைப் புரிந்து கொண்டாலும் “ஆனால் கார்த்திக் சாயந்திரம்தான் வரச் சொன்னார்” என்றான் ராஜன் தயக்கத்துடன். எனினும் அனுஷாவின் நிலைகொள்ளாத தவிப்பைப் பார்த்து “சரி... வா, போயிட்டு வரலாம்” என்றபடி கிளம்பினான்.

ஒருவேளை கார்த்திக்கும் ஸ்ரீயும் எங்காவது வெளியே போயிருப்பாங்களோ, பூட்டப்பட்ட வீடுதான் தங்களை வரவேற்குமோ?

வீடு திறந்துதான் இருந்தது. கதவைத் திறந்தது கார்த்திக்தான்.

“உங்க தங்கை கர்ப்பமா இருக்கா. இரண்டரை மாசம். அதை உங்ககிட்டே சொல்லலாம்னுதான்.” முகத்தில் புன்னகை என்றாலும் ஏதோ மிகவும் அதிகம் பேசிவிட்டாற்போல சட்டென்று வாயை மூடிக் கொண்டான்.

கார்த்திக்கின் கையைப் பிடித்து ராஜன் மனமார்ந்த மகிழ்ச்சியுடன் குலுக்க, “ஸ்ரீ எங்கே?” என்று கேட்டாள் அனு.

“உள்ளே தூங்கிக்கிட்டிருக்கா.”

சிறு தயக்கம் ஏற்பட்டது அனுஷாவுக்கு. “உள்ளே போய்ப் பாருங்களேன்” என்றும் கார்த்திக் கூறவில்லை. மனைவியையும் வெளியே வரச் சொல்லவில்லை. என்ன செய்ய?

தயக்கத்தை உடைத்துக்கொண்டு வேகமாக உள்ளே சென்றாள் அனுஷா.

(தொடரும்)

## மெடிக்கல் மூலை!

நீரிழிவினால் பாதிக்கப்பட்டவர்களின் நலனுக்காக சர்வதேச நீரிழிவு மையம், ஒரு விளக்க அறிக்கையை வெளியிட்டுள்ளது. நீரிழிவு இருக்கிறதா என்று எப்படித் தெரிந்து கொள்வது, இந்தக் குறைபாடு யாருக்கு ஏற்படும், இதைக் கட்டுப்படுத்த என்னென்ன சிகிச்சைகள் அளிக்கப்பட வேண்டும் போன்ற முக்கிய தகவல்கள், முதல் முறையாகத் தெளிவாக அறிவிக்கப்பட்டுள்ளன. அறிக்கையின் முழு விவரங்களையும் www.idf.org எனும் இணையதளத்தில் கண்டுகொள்ளலாம்.

R



# பதின்மூன்றாவது மனைவி!

ஆப்பிரிக்காவிலுள்ள குட்டி முடியாட்சி நாடு சுவாஸிலாந்து. இந்நாட்டு மன்னர் மூன்றாவது ஸ்வாடிக்கு பொழுது போகவில்லை. எப்பொழுதெல்லாம் பொழுது போகவில்லையோ, அப்பொழுதெல்லாம் ஒரு பெண்ணைப் பார்த்துத் திருமணம் செய்துகொள்வது இந்த மன்னரின் வழக்கம். இதுவரை மொதம் 12 முறை இவருக்கு போரடித்திருக்கிறது. சமீபகாலமாக மறுபடியும்!

விரைந்து செயல்பட்டார் மன்னர். உடனடியாக 4000 பெண்களை வரவழைத்து அவர்களை நடனமாடச் செய்து, தன் மனதிற்குப் பிடித்த பின்ட்லி காம்புலே எனும் 17 வயதுப் பெண்ணைத் தேர்ந்தெடுத்தார். ஆயிற்று. மன்னர் தேர்ந்தெடுத்துவிட்டால் போதும்... 'என்னம்மா உனக்கு இந்த ராஜாவைப் பிடிச்சிருக்கா?' என்றெல்லாம் அந்தப் பெண்ணை கேட்கமாட்டார்கள். 'அப்புறமென்ன, இரண்டு பேருக்கும் ஒருத்தரை ஒருத்தர் பிடிச்சிருக்கு. அரண்மனைக்குக் கூட்டிக்கிட்டுப் போக வேண்டியதுதான்' என்று கூட்டிக் கொண்டு போய்விடுவார்கள்.

சரி, திருமணம் எப்பொழுது? சிறிது காலம் கழிந்த பிறகுதான். ஏனாம்? சம்பிரதாயம். பெண் பிடித்துவிட்டது என்பதற்காக உடனடியாகத் திருமணம் நடைபெற்றுவிடாது. முதலில் அந்தப் பெண் திருமணத்துக்குத் தயாராக வேண்டும். அது எப்படி? ஒரு குழந்தைக்குத் தாயாராகிவிட்டால் போதும். பிறகு ஆப்பிரிக்க மேளங்கள் அதிர, மன்னரின் கைத்தலத்தை மணப்பெண் பற்றிவிடலாம்.

இதே ஆண்டு ஜூன் மாதம் மாண்புமிகு மன்னருக்கு போரடித்தபொழுது 16 வயது நோதண்டோ டுபே எனும் பெண்ணைத் திருமணம் செய்துகொண்டார். இவருடைய 12 மனைவிகளில் இருவர், இவரை விட்டுப் பிரிந்து சென்றுவிட்டனர். விவாகரத்து எல்லாம் கிடையாது. அரண்மனையை விட்டுத் தப்பி ஓடிவிட்டனர். அன்னாருக்கு மொத்தம் 27 குழந்தைகள். இவரால் நாட்டுக்கு ஒரே உபயோகம், என்றும் மாறாதிருக்கும் பத்திரிகை தலைப்புச் செய்திதான். 'இன்றைய முக்கிய செய்தி - சுவாஸி மன்னருக்குத் திருமணம்.

சுவாசிகளில் பெரும்பாலானோர் பூவா இல்லாமல் சிரமப்பட்டுக் கொண்டிருக்க, மன்னர் 16 மில்லியன் டாலரில், எஞ்சியிருக்கும் தனது 10 அதிகாரபூர்வ மனைவிகளுக்கும் (அப்படியென்றால் என்ன?) மாளிகைகள் கட்ட அரசாங்க கஜானாவிற்குள் கையை விட்டுத் துழாவியிருக்கிறார். 500,000 டாலரில் ஒரு மேபாக் கார்கூட வாங்கியிருக்கிறார்.




இதே சுவாஸிலாந்தில்தான் 40 சதவீத மக்கள் எய்ட்ஸ் நோயினால் பாதிக்கப்பட்டிருக்கின்றனர். மன்னருக்கு இது தெரியும். தெரிந்து என்ன செய்தார்? விரைந்து செயல்பட்டு தக்க நடவடிக்கைகள் எடுத்தார். தன் புது

முறைப் பெண்ணை தென்னாப்பிரிக்காவுக்கு எச்.ஐ.வி. பரிசோதனைக்காக அனுப்பி வைத்தார். போதாதா?

1982இல் மரணமடைந்த மன்னரின் தந்தையார், இவரைவிட மாண்பு மிகுந்தவர். இவரது ஆட்சிக் காலத்தில் இவருக்கு மொத்தம் 70 முறை போரடித்திருக்கிறது.




பட்ட காலிலேயே பட்டிருக்கிறது. 'நீ போய்ட்டு வா. நான் பார்த்துக்கறேன்' என்று காத்ரீனாவிற்கு டாட்டா காட்டி அனுப்பிவிட்டு, அதன் இடத்தை பிடித்துக் கொண்டிருக்கிறது ரீட்டா. கோழிக் கூட்டம் கிறிய குப்பை மேடு போல் தோற்றமளிக்கிறது டெக்ஸாஸ்.

மின்சாரம் துண்டிக்கப் பட்டுவிட்டது. டெக்ஸாஸில் மட்டும் மொத்தம் 4,76,000 பேர் இருட்டை துழாவிக் கொண்டிருக்கின்றனர். வீடுகள் முழுக்க மழைத் தண்ணீர். ஆனால், தாகத்துக்கு சொட்டுக் குடி தண்ணீர் கூடக் கிடையாது. கார் கதவைச் சாத்திவிட்டு காலை மடக்கி வைத்துத் தூங்கிக் கொண்டிருக்கிறார்கள். வைரஸை நிரப்பிக்கொண்டு ரோந்து போய் கொண்டிருக்கின்றன கொசுக்கள். கிட்டத்தட்ட குகை மனிதர்களைப் போல வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள் அமெரிக்கர்கள். புஷ் என்ன செய்தார்? விரைந்து செயல்பட்டு தக்க நடவடிக்கைகள் எடுத்தார். அக்டோபர் இறுதி வரை குப்பையை அள்ளுவதற்குத் தேவையான பணத்தை வழங்கிவிட்டதாக அறிவித்துள்ளார்.

நிற்க. புஷ்ஷுக்கு இரண்டு முறை போரடித்திருக்கிறது. விளைவுகள்? ஆப்கானிஸ்தான், ஈராக். நினைவில் வைத்துக்கொள்ளுங்கள்... சுவாஸி மன்னர் வேறு. புஷ் வேறு. ஒரே மாதிரி செயல்படுகிறார்கள் என்பதற்காக இருவரையும் போட்டுத் தேவையில்லாமல் குழப்பிக்கொள்ளக் கூடாது.

- மருதன்

# நானுமல்ல... நரியுமல்ல!

மனிதர்களின் வாழ்க்கையை அமைப்பதில் வாயில்லாப் பிராணிகளுக்கு எவ்வளவு சக்தி உண்டு, தெரியுமா? எங்கள் ஊரிலே கருட தரிசனம் ஆகாத கல்யாணம் ஒன்றுகூட நடந்ததில்லை. ஆனால், சுமங்கலிகளின் எண்ணிக்கையை விடக் கைம்பெண்களின் தொகைதான் எங்களூரில் அதிகம்! அதிலும் யாராவது வெளி ஊருக்குப் போவதெற்கென்று கிளம்பி வாசலில் வந்து நின்றுவிட்டால், சுமங்கலி ஒருத்திகூடக் கிடையாதோ என்று தோன்றும். சுமார் அரை மணி நேரம் காத்திருந்துவிட்டு, அமங்கலி யாரும் வராத நேரத்தில் வேகமாக ஓடி வீதியைக் கடக்க வேண்டும்.

உலகிலேயே செவிக்கு இனிய குரல் எந்தப் பிராணியினுடையது என்று என்னைக் கேட்டால், கழுதையினுடைய குரல்தான் என்று சொல்வேன். நீங்கள் நகைக்கலாம்! ஆனால், கழுதையின் சத்தலைப் போல் சிறந்த சகுனம் வேறில்லையென்பது உங்களுக்குத் தெரியுமா? வாழ்நாளில் காரியசித்தி பெறுவதற்குக் காரணமாயிருக்கும் கழுதையின் குரல், இனியதினும் இன்ப சங்கீதமாய் ஏன் இருக்காது! கர்த்தபசுரத்தின் தனிப்பெருஞ் சிறப்பு இதுவேயாகும். வாழ்க்கையில் அடிக்கடி தோல்வியடைந்து கஷ்டப்படுவோர் நான் சொல்வதைக் கேளுங்கள். கழுதைகள் நிறைய வளர்க்கும் வண்ணார் வீட்டுக்குப் பக்கத்தில் சென்று குடியிருங்கள். நீங்கள் காரியசித்தி பெறுவது திண்ணம்.

குதிரைப் பந்தயக் கடைகளில் தினந்தோறும் பணம் தோற்றுவிட்டு, 'மூன்றாம் பேஸ்' வைத்த முகத்துடன் வீடு திரும்பும் நண்பர்களுக்கு ஒரு யோசனை கூறுகிறேன். இக்காலத்தில் சில பெரிய மனிதர்கள் புனுகுப் பூனை, முயல் குட்டி, நாய்க்குட்டி முதலிய பிராணிகளைப் பிடித்துச் செல்லமாய் வளர்க்கிறார்கள். இவர்கள் விஷயம் தெரியாதவர்கள். நீர் எங்கேனும் சென்று, எப்பாடாவதுபட்டு, ஒரு நரியைப் பிடித்துக்கொண்டு வந்து, கூண்டில் அடைத்து வளர்த்து வாரும். தினம் காலையில் எழுந்ததும் அதன் முகத்தில் விழித்துவிட்டு வெளியே கிளம்பும். அன்று நீர் பந்தயத்தில் ஜெயிக்காவிட்டால் என்னைக் கேளும் - இல்லை, நரியைக் கேளும். ஆனால், ஒன்று ஞாபகத்தில் வைத்துக்கொள்ளும். நீர் நரி முகத்தில் விழித்தெழுந்தாலும், புறப்படும்போது பூனை குறுக்கே போய்விட்டால், உமது தோல்விக்குப் பொறுப்பாளி நானுமல்ல, நரியுமல்ல. ஆகையால் வீட்டிலே பூனைக்குட்டிகள் ஏதேனும் இருந்தால், முதலில் அடித்துத் துரத்திவிடும்.

நான் கலாசாலையில் படித்துக் கொண்டிருந்தபோது, என் சிற்றன்னையின் வீட்டில் சிலநாள் இருக்க நேர்ந்தது. அந்த அன்னையின் புதல்வன் மணி என்பவன், இரண்டாவது பாரத்தில் படித்துக் கொண்டிருந்தான். சகுனம் பார்ப்பதில் அந்த அம்மாளுக்கு விசேஷ பிரேமையுண்டு. தினசரி பையன் பள்ளிக்கூடம் போகும்போது சகுனம் பார்த்துத்தான் அனுப்பி வைப்பாள். முதல்நாள் பையனுக்கு இங்கிலீஷ் பரீட்சை. எனக்கு விடுமுறை. ஆதலால் வீட்டிலேயே இருந்தேன். சிற்றன்னை அன்று காலையில் அவசர அவசரமாக வீட்டுக் காரியங்களை முடித்துப்



அமரர் கல்கி

பையனுக்குத் தலை
வாரிப் பின்னிக்
குளிப்பாட்டி,
சாதம் போட்டு,
உடை உடுத்தி விட்
டாள். இதற்குள்
மணி பத்து ஆகி விட்
டது. பையனை உள்ளே
இருக்கச் செய்து, வாசலில்
வந்து பார்த்துவிட்டு, "வா
வா! யாரும் வரவில்லை.
ஓடிவா!" என்றாள் தாயார்.
ஆனால் பையனுக்குக் கொஞ்
சம் கறுகறுப்பு அதிகம். அவன்
வாசற்படிக்கு வருவதற்குள்
"உள்ளே போ, கொஞ்சம் தண்ணீர்
சாப்பிடு!" என்று தாயார் கூறி
னாள். நான் வாசலில் போய்ப்
பார்த்தபோது, விதவை ஒருத்தி
சந்து திரும்பி வந்து கொண்டிருந்
தாள். அடுத்தமுறை பையன் கிளம்
பும்போது ஒற்றைப் பிராமணர்
ஒருவர் வந்தார். என் சிற்றன்னை
பிராம்மணாபிமானம் நிரம்ப
உள்ளவள்தான். ஆனால், அந்தப்
பிராமணருக்கு அன்றைய தினம்
அவள் கொடுத்த சாபங்களில்
ஏதாவது பலித்தால்கூடப் போதும்.
அந்த மனிதருடைய உயிரை எந்த
துரதிர்ஷ்டம் பிடித்த கம்பெனி
யாவது இன்ஷ்யூர் செய்திருந்தால்,
அது வாயில் மண்ணை வாரிப்
போட்டுக்கொள்ள வேண்டியது
தான்.



இதற்குள் பத்து அடித்து இருபது
நிமிஷம் ஆகிவிட்டது. கடைசியாக,
"அப்பா ஓடிவா! தண்ணீர்க் குடத்
துடன் சுமங்கலி வருகிறாள். திவ்ய
மான சகுனம்" என்று தாயார்
கூவினாள். பையன் அவசர
மாகப் புறப்பட்டுச் சென்றான்.
சந்து திரும்பும் வரையில்
மேற்படி சுமங்கலியைத் தவிர
வேறு யாரும் எதிர்ப்படவில்லை. "நல்ல பேஷான சகுனம்.
குழந்தை நூற்றுக்கு நூறு மார்க்கு வாங்குவான், பார்!"
என்றாள் குதூகலத்துடன். எனக்கு மட்டும் கொஞ்சம்
சந்தேகமாகவே இருந்தது. ஆனால், சகுனத்தின் பலன்
இப்படியாகுமென்று நான் எதிர்பார்க்கவே இல்லை.
கால்மணி நேரம் ஆனதும், பையன் போனதுபோலத்
திரும்பி வந்துவிட்டான். எங்களிருவருக்கும் தூக்கிவாரிப்
போட்டது. "என்ன? என்ன?" என்று இருவரும் ஏக
காலத்தில் கேட்டோம். "நான் போவதற்குள் மணி அடித்து
15 நிமிடம் ஆகிவிட்டது.
ஆகையால் பரீட்சை எழுத
விடமாட்டேன் என்று
வாத்தியார் சொல்லிவிட்
டார்" என்றான் பையன்.

- கல்கி கட்டுரைகள்
தொகுதி - 3லிருந்து...
வானதி பதிப்பகம்





கம். அவர்கள் விருட
நடக்கும். நல்ல மரியாதை உ
மாடலிங் துறையில் ஏராளமான
டடுகிறார்கள். கிடைக்காத பட்சத்



• ஆண்டனி ஸ்ரீதர்

**அரசாங்க நலத் திட்டங்களுக்கே விளம்பரங்கள் தேவைப்படுகிற இக்காலத்தில், வணிகப் பொருட்களின் நிலைமையைக் கேட்கவே வேண்டாம். இப்படி ஜெகஜ்ஜோதியாக வளர்ந்து கொண்டிருக்கும் மாடலிங் துறையைப் பற்றி முன்னணி புகைப்படக் கலைஞர் ஆண்டனி ஸ்ரீதர், நம்மிடம் பகிர்ந்து கொண்டார்...**

"சென்னையில் பெங்களூர், மும்பை போல பெரிதளவில் மாடலிங் ஸ்கூல் எதுவும் கிடையாது. மாடலிங் பண்ண ஆசைப்படும் இளைஞர்கள், முதலில் தங்களை அதற்கேற்றவாறு தகுதிப்படுத்திக் கொள்ள வேண்டும்.

புகைப்படம் எடுக்கும்போதுதான் பலருக்குத் தாங்கள் எவ்வளவு குண்டாக இருக்கிறோம் என்றே தெரிய வருகிறது. கட்டாயம் டயட் இருக்க வேண்டும். ஸ்கின் கேரில் கவனம் வேண்டும். எந்த உடை உடுத்தினால் அழகாக இருப்போம் என்கிற அறிவு வேண்டும். சிரத்தையும் தேடுதலும் ஒரு மாடலுக்கு மிக அவசியமானது.

அதன்பின் கைதேர்ந்த புகைப்படக் கலைஞரிடம் சென்று போர்ட்ஃபோலியோ செய்ய வேண்டும். இதற்குக் குறைந்தபட்சம் பத்தாயிரம் ரூபாயைச் செலவு செய்ய முன் வர வேண்டும். விளம்பரத் துறையில் நடிக்கும் மாடல்கள் அனைவரும் மாடலிங் கோ - ஆர்டினேட்டர்கள் மூலமாகத்தான் தேர்வாகிறார்கள். புதிய முகத்துக்கு ஒரு நாளைக்குக் குறைந்தபட்சம் ஐந்தாயிரம் ரூபாய் தருவார்கள். நீங்கள் நடிக்கும் விளம்பரம் ஹிட்டானால், ஐந்தாயிரத்திலிருந்து ஒரேயடியாக இருபத்தைந்தாயிரத்துக்குத் தாவுவதற்கும் வாய்ப்புண்டு.

கவர்ச்சியாக நடிக்க வேண்டும் என்கிற கட்டாயம் கிடையாது. முன்னணி மாடலான ப்ரார்த்தனா, ஸ்லீவ்லெஸ்கூட அணிய மாட்டார். விளம்பர உலகம் பெண்களுக்கான உல

பப்படிதான் எல்லாமே
ண்டு. இன்றைய தேதியில்
மிழ்ப் பெண்கள் தேவைப்
லதான் பெங்களூர், மும்பை





என்று வலை வீசுகிறோம். ஆர்வத்துடன் வருப வர்களுக்கு மாடலிங்கின் கதவு எப்போதும் திறந்தே இருக்கிறது.''

- பப்பி

மாடல் படங்கள்: ஆண்டனி ஸ்ரீதர்

# டலுக்கு
# மரியாதை!



"வெளிநாட்டு ஃபைனாகுலர் வாங்கிய வகையில் செலவு பத்தாயிரம் பொற்காசுன்னு கணக்கு எழுதியிருக்கிறீரே! எதுக்கு அமைச்சரே அது?"

"தொலைநோக்குப் பார்வையுடன் திட்டங்களை உருவாக்கும்படி நீங்கதானே மன்னா, சொன்னீங்க?"

- உ.ராஜாஜி



# காதலுக்கு தண்டனை!



"என் மகளைக் காதலித்த உன்னைத் தண்டித்தே தீருவேன்..."

"மன்னா..."

"ஆம்... அவளையே நீ கல்யாணம் செய்துகொள்!"

- எம். அசோக்ராஜா

"மார்ச்சுவரிக்கு எப்படிப் போகணும்?"

"டாக்டர் ரூம் இந்தப் பக்கம்தான் வாங்க!"

- பருத்தி இக்பால்



''எதுக்கு பாங்க் லாக்கரை உடைச்ச...?''

''நான் திருடின நகை எல்லாத்தையும் பத்திரமா உள்ளே வைக்கத்தான் எசமான்.''

- வி. சாரதி டேச்சு





''அந்த டாக்டர் போலின்னு எப்படிச் சொல்ற?''

'' 'ஷுகர் இருக்கா பாருங்க டாக்டர்'னு சொன்னா, 'எதுக்கு கேண்டீன்ல சர்க்கரை இல்லாத காபி சொல்லப் போறீங்களா'ன்னு கேக்கறார்!''

- நெல்லையப்பபுரம் செல்வன்

''ஏதுடா இவ்வளவு காசு?''

''போலீஸ், திருடன் விளையாட்டு விளையாடினப்ப மாமூலா கிடைச்சுதுப்பா''

- அஜீத்லால்





திருநீறு சம்புடத்தைத் திறக்கும்போதெல்லாம் சாம்புவின் ஞாபகம் மேலிட்டு வருகிறது; வாட்டுகிறது. ஒரு வகையில் அது பொருத்தம்தான். வாழ்க்கையின் நிச்சயமின்மையை உணர்த்தும் குறியீடுதானே திருநீறு! ஆனால் சாம்பு குறியீடு அல்ல; யதார்த்தம். முகத்தில் அறைகிற யதார்த்தம்!

ராமமூர்த்தி சாஸ்திரிகளை நீங்கள் அறிந்திருக்க வாய்ப்பில்லை. சாம்புவின் அப்பா. சாம்புவின் அப்பா என்பது ஒன்றும் அவருக்குப் பெரிய விலாசமாகிவிட முடியாது என்பீர்கள். சரிதான். எனினும் குடியரசுத் தலைவர் விருது ராமமூர்த்தி சாஸ்திரிகளின் விலாசம் தேடி வந்திருக்கிறது - யஜுர் வேத அத்யயனத்தில் பாண்டித்யம் பெற்றதற்காக. இரண்டே வரிகளுக்குள் அடங்கிவிடக்கூடிய விலாசம்தான்: நல்லூர் வில்லேஜ் அண்ட் பி.ஓ. திருச்சி மாவட்டம்.



ஊருக்கு நான் போனபோதுதான் விஷயம் தெரிய வந்தது. விருது வழங்கப்பட்ட செய்தியின் நகலை அவர் காட்டியிராவிட்டால் நம்பியிருப்பேனா என்பதும் சந்தேகம் தான். பின்னே, அர்ச்சனைக்குக் கொண்டுபோன புஷ்பத்தை நைவேத்திய தட்டில் வைத்துவிட்டு, நைவேத்தியம் செய்ய வேண்டிய பழத்தை சூடத் தட்டில் வைத்துக் கொண்டு எங்கள் நல்லூர் விசுவநாத ஸ்வாமிக்கு அவர் ஆராதனை செய்ய முற்பட்டதைப் பார்த்திருந்தால் நீங்களும்தான் நம்பியிருக்க மாட்டீர்கள்! இத்தனைக்கும் முன் கூட்டியே தபால் அறிவிப்புச் செய்துவிட்டுத்தான் போனேன் - 'குடும்பத்தோடு வருகிறேன். ஊரில் உள்ள நான்கு கோயில்களிலும் அர்ச்சனை ஆராதனை பண்ணிக் கொண்டு ஒரு மணி நேரத்தில் புறப்பட்டுவிட வேண்டும்' என்று.

# மந்திரமாவது நீறு!

திருச்சியிலேயே ஒரு நல்ல குவாலிஸ் வண்டி பிடித்து இரண்டரை தலைமுறைகள் சார்ந்த எனது குடும்பத்தினர் பன்னிரண்டு பேரையும் அதில் ஏற்றி அடைத்துக் கொண்டு போய் ஊர் எல்லையில் இறங்கியதில், சாஸ்திரிகள் அரண்டுவிட்டார்.

“எல்லாரும் அகத்துக்கு வந்து சாப்பிட்டுட்டுத்தான் போகணும்” என்றார் குவாலிஸ் பரப்பிய புழுதி அடங்கும் முன்!

“முதல்ல கோயிலுக்குப் போகலாமே...” என்று எல்லையிலேயே வண்டியை நிறுத்திவிட்டு மண் வீதிகளில் நடந்தோம்.

வைகாசி மாதத்துத் தகிப்பில் அந்த மாலை வேளையிலும் மண் சுட்டது.

“ரொம்ப ஒண்ணும்



இராது... ஒரு மோர்ஞ்சாதம் - நார்த் தங்கா" சாஸ்திரிகள் மீண்டும் அகத் துக்கு அழைப்பு விடுத்தார்...

"ஏன் வீண் சிரமம்... நாங்க இத்தனை பேர் இருக்கோம்..'' என்று மனைவி யதார்த்தம் பேசி மறுக்க...

"சிரமமா...! நீங்கள்லாம் வர கொடுத்து வைச்சிருக்கணுமே..."

''அதுக்கில்லே, ராத்திரி பத்தரைக்கு திருச்சியில் ரயில் பிடிக்கணும்... வந்த ரோடு வேற மோசமாயிருந்தது..."

"அவ்வளவு அவசரத்துல வருவாளா...?" விசுக் விசுக்கென்று கூட நடந்து வந்தவர் விடுவதாக இல்லை... ''ராக் ஃபோர்ட்தானே... அதுக்குள்ளே போயிடலாம்..."

முத்துமாரியம்மன் கோயிலை நெருங்கியிருந்தோம். ''சாரதா... சாரதா!'' சாஸ்திரிகள் இரைந்தபடி வேகமாக முன்னேறிப் போனார். கறுப்பு தாவணி அணிந்து கோயில் வாசலில் காத்திருந்த பெண் எங்களை நோக்கி வந்தாள்.

"நீ சீக்கிரமா போய் சிவன் கோயில்லயும் பெருமா கோயில்லயும் சொல்லிட்டு, ஆத்துக்குப் போய் இலையைப் போடு... அம்மாகிட்டே சொல்லி..."

"எல்லாம் ஏற்பாடு பண்ணியாச்சப்பா... நைவேத்யம் உள்ளே இருக்கு..."

"என் பொண்ணு!" என்றார் சாஸ்திரிகள் எங்களைப் பார்த்து. "பையன் பொறந்து பத்து வருஷம் கழிச்சுப் பொறந்தா" என்றார் மன்னிப்புக் கோரும் தொனியில்.

சாரதா பளிச்சென்று சிரித்து கரம்கூப்பி

சீதா ரவி

வரவேற்றான். ''எல்லாம் தயாராயிருக்கு கோயில்ல...'' என்று சொல்லிவிட்டு ஒய்யாரமாக லேடீஸ் சைக்கிளில் ஏறிப் போனான்.

முத்துமாரிக்கு அர்ச்சனை செய்யவும் புடைவை சார்த்தவும் எடுத்து வந்திருந்த திரவியங்களை சாஸ்திரிகளிடம் கொடுத்தோம்.

"குங்குமமா... பேஷ்! அட கஸ்தூரி மஞ்சப்பொடி...! சிவப்புல புடைவையா... ரொம்ப விசேஷம்... அதுதான் சாத்தணும் மாரியம்மனுக்கு... பிச்சிப்பூ! அடாடா... எத்தனை திரவியம் இன்னிக்கு அம்மனுக்கு!" என்று சந்தோஷத்திலேயே எல்லாப் பொருள்களையும் தொட்டுத் தடவிப் பார்த்து மகிழ அவருக்கு அவகாசம் தரத்தான் வேண்டியிருந்தது.

''மாமா! இப்படிக் கொடுங்கோ எல்லாத்தையும் அடுக்கித் தரேன்..." என்று என் மருமகள் உஷா அவரிடமிருந்து பிடுங்காத தோஷமாய்ப் பொருள்களை வாங்கி தட்டுகளில் அடுக்கித்தர, சொம்பில் தண்ணீர் கொண்டு வந்து சங்கல்பத்தை ஆரம்பித்தார்.

இதற்குள் அவரில் பாதி வயதேயான குருக்கள் ஒருவர் வந்து சேர, ''வந்துட்டியா ரமேஷ்''.... வா! வா! இந்தா பண்ணு அர்ச்சனையை'' என்று பாத்திரத்தைக் கைமாற்றிவிட்டு எங்கள் பக்கத்தில் நின்றுகொண்டார்.



முத்துமாரிக்குப் புடைவை சார்த்தி அர்ச்சனை ஆனதும் ஸ்டூல் தூக்கிலிருந்த கண்டலைத் தூக்கிக் கொடுத்து நைவேத்யம் செய்யச் சொன்னவர், ''கோனார், கோனார்!" என்று இரைந்தபடி வீதிக்கு இறங்கிவிட்டார். தெருக்கோடியில் வசித்த கோனாரை அழைத்து வந்து, மாரியம்மன் கோயில் வெளி மண்டபத்தில் ஒரு பொந்துக்குள் இருந்த முனீஸ்வரனுக்குப் பூஜை போடச் செய்தார்.

கோனாரும் குத்துக்காலிட்டு அமர்ந்து முனீஸ்வரனுக்குக் கொஞ்சம் பிச்சிப்பூ சார்த்தி, ஒரு தேங்காயை உடைத்து வைத்து, சூடம் ஏற்றினார். வேட்டி மடிப்பிலிருந்த பிராந்தி பாட்டிலிலிருந்து ஒரு மூடி அளந்து எடுத்து எரிகிற சூடத்தின் மேல் ஊற்றிவிட்டு மீண்டும் அழுத்தி மூடி பாட்டிலைப் பத்திரப்படுத்தினார்.

"இங்கே இப்படித்தான்..." என்றார் சாஸ்திரிகள், வெட்கத்துடன். "சூடம் அணையாது பாருங்கோ..." என்றார் அப்பாவித்தனமாக. படபடவென்று கன்னத்தில் போட்டுக் கொண்டு கோனார் கொடுத்த திருநீறைப் பெற முதல் ஆளாகக் கை நீட்டினார். நாங்கள் பிரசாதம் பெற்றுக் கொண்டு கோனாருக்கும், முத்துமாரிக்கும், பூஜை செய்த குருக்களுக்கும் சன்மானம் வழங்கியதை திருப்தியோடு பார்த்துக்கொண்டார்.

"பெருமா கோயிலுக்குப் போவோமா...?" என்றார் வெகு உற்சாகமாக.

இப்படியே வரதராஜ பெருமாள் கோயில், காசி விச்வநாதர் விசாலாக்ஷி ஆலயம், வாய்க்கால் படித்துறை முருகன் கோயில் என்று உள்ளங்கை அகல ஊரில், சின்ன புள்ளிகளாக இருந்த கோயில்களுக்குப் பெருமிதத்தோடு அழைத்துப் போனார் ராமமூர்த்தி சாஸ்திரிகள். மியூசியம்களைச் சுற்றிக் காட்டி விளக்கும் சிரத்தையோடு விவரணைகள் சொன்னார். அந்தந்த கோயில்களில் சாரதா முன்கூட்டியே ஆஜர்படுத்தியிருந்த குருக்கள்மார் பூஜை செய்ய, அவர்கள் பிரசாதம் வழங்கியபோது மட்டும் சேர்ந்து கொண்டு பலமாக ஆசி மந்திரம் சொன்னார். பூஜை செய்தவர்கள் புது ரூபாய் நோட்டுகளைச் சன்மானமாகப் பெறுவதைப் பார்த்துப் பார்த்து, திருப்தியோடு தலையசைத்து சந்தோஷப்

**‘எங்களோடது**
**ஆதர்ச இல்லமா...?!**
**பகவானே...’**

பட்டார். முருகன் கோயிலையொட்டிய வேத பாடசாலையிலிருந்து நான்கு பிள்ளைகளை வரவழைத்து சுப்ரமண்ய புஜங்கம் ஓத வைத்துத் தலையாட்டி ரசித்தார். பத்து நிமிடங்களுக்கொரு முறை, "அகத்தில் சாப்பிட்டுவிட்டுத்தான் போகவேண்டும்" என்று சொல்லிக் கொண்டேயிருந்தார். நான்கு



## 'எதையும் எதிர்பார்க்காமல் ப்ரியம் ஏன் என்னிடம்?!'

கோயில்களிலும் நைவேத்தியமான பிரசாதங்களையும், பெருமாள் கோயில் ஆஞ்சநேயருக்குச் சார்த்திய வடை மாலையையும் மட்டும் கண்ணில் காட்டவேயில்லை!

முருகன் கோயிலோடு எங்கள் யாத்திரை முடிந்தபோது இருட்டிவிட்டது. "கொஞ்சமாவது கை நனைக்காம போகக்கூடாது" என்று கெஞ்சியவரை மிஞ்ச மனமில்லாமல் அவர் வீட்டுக்குப் போனோம்.

"சாரதா! சாரதா! அம்மாவைக் கூப்பிடு!" என்று நான்கு வீடுகளுக்கப்பாலிருந்தே கூவ ஆரம்பித்தவர், வீட்டு வாசலில் நின்று கொண்டு "வாங்கோ வாங்கோ" என்றார் எங்களை நோக்கி... "சாப்பிட்டுட்டுத்தான் போகணும்; இலை போட்டாச்சு..." என்றார் மீண்டும் முத்தாய்ப்பாக.

"நீங்க இன்னொரு தடவை சொன்னா இங்கேயே சாப்பிட உட்கார்ந்துடுவோம்..." - திண்ணைப்படியில் செருப்புகளைக் கழற்றியபடி நக்கலாகச் சொன்னேன்.

"சே! சே! இங்கே வேண்டாண்ணா... உள்ளே போயிடுவோம்" என்றார் கபடமில்லாமல். "அவர் எப்பவுமே இப்படித்தான்... சொன்னதையே சொல்லிண்டிருப்பார்" என்றாள் சாரதா எங்களை உள்ளே அழைத்தபடி.

முற்றத்தில் பித்தளை அண்டாவில் ஜலமும் சொம்பும் தயாராயிருந்தன. அதை ஒட்டிய கூடத்தில் சாஸ்திரிகளின் மனைவி, வாழை இலைக் கட்டைத் தயாராய்க் கையில் ஏந்தி நின்றார்.

பூஜை மாடத்தில் ஊதுவத்தி புகைந்தது. பழைய சாய்வு நாற்காலி, அதைவிடப் பழைய ரேடியோ செட், அதனினும் பழையது அதைத் தாங்கி நின்ற மேஜை. உத்தரத்தின் கட்டைகள் சுருக்கம் விழுந்த நூற்றுக் கிழவியின் முகத்தை நினைவூட்டின. முகத்தை அலம்பி நிமிர்ந்தபோது சாஸ்திரிகள் நீட்டிய துண்டும் பழசுதான். அப்போதுதான் கவனித்தேன், அவரும் அவர் குடும்பத்தினரும் உடுத்தியிருந்த ஆடைகளை. அவற்றின் பழைமையைப் போக்கிக்கொண்டு அந்த வீட்டை நிறைத்து நின்றது அந்த மூவர் முகத்திலும் ததும்பிய வரவேற்புப் புன்னகை.

மாமி மளமளவென்று இலையைப் போட, சாரதா தண்ணீர் தெளித்து விறுவிறுவென்று பரிமாற... நான்கு கோயில்களிலிருந்தும் வந்திருந்த வைவேத்திய பிரசாதங்கள் அந்த இளம்பச்சை குருத்து வாழை இலைகளைத் தொட்டதும் பசு நெய்யும் வெல்லமும், மிளகு ஜீரகப் பெருங்காயமும், வாழை இலையுடன் சேர்ந்து வாசம் வீச ஆரம்பித்தன.

சாரதாவை நிம்மதியாய்ப் பரிமாற விடாமல் விரட்டிக் கொண்டிருந்தார் சாஸ்திரிகள். மாமி வீட்டிலிருந்த ஊறுகாய்களையெல்லாம் நாங்கள் ருசித்தாக வேண்டும் என்று பிடிவாதமாய்க் குதிக்காத குறை... இஞ்சி தட்டிப் போட்டு மோரைக் கடைந்து எடுத்து வந்தார். இஞ்சி வாசனை ஆகாது என்று மறுத்த என் மனைவிக்குத் தனியாக கறிவேப்பிலை மட்டும் தாளித்து ஒரு சொம்பு மோர்!

"பார்த்துப் போடு சாரதா... அந்த வடை எங்க? வடை மாலை வடை இல்லை... சிவன்

கோயில் வடை... அது தனியா இருக்கே..."

"நீங்க சித்த விரட்டாத இருந்தா நானே பார்த்துப் போடுவேன்" என்று சாரதா கடிந்துகொள்ள... "சொன்னதையே சொல்லாதீங்கோ..." என்று அவர் மனைவி ஓர் அதட்டுப் போட, அதற்கும் கபடமில்லாமல் சிரித்தார் சாஸ்திரிகள்.

பிறந்த மண்ணை மீண்டும் தொட்ட மகிழ்வும், எப்போதோ விட்டுப் பிரிந்த பால்ய நினைவுகளைப் புதுப்பித்துக் கொண்ட நிறைவும், விளையாட மட்டுமே சென்ற கோயில்களில் வினை தீர்க்க வேண்டி நின்ற நெகிழ்வும், பரிசுத்தமான பளிங்கு மனங்களின் உபசரணையும் சேர்ந்து எனக்குள் இறுகிக் கிடந்த உணர்வுகளை நெகிழ்த்திக் கொண்டிருந்தன.

ராமமூர்த்தி சாஸ்திரிகளின் புராதன வீடும், அவருடைய ஏழை மனைவியும் எளிய பெண்ணும் அடங்கிய இந்த மகிழ்ச்சி நிறைந்த குடும்பம் ஆதர்ச இல்லறமாகத் தோன்றியது. எதையும் எதிர்பார்க்காமல் இப்படி ஏன் என்னிடம் ப்ரியம் காட்ட வேண்டும்!

அடைத்த தொண்டையைக் கமறிக் கொண்டபோது 'இந்தக் குழந்தைக்கு என்னால் முடிந்ததைச் செய்ய வேண்டும்' என்று தோன்ற

"சாரதா, என்னம்மா படிக்கற...?" என்றேன்.

"டிகிரி முடிச்சுட்டேன் மாமா... கரஸ்ல எம்.ஏ. எகனாமிக்ஸ் படிக்கறேன்... திருச்சில வேலைக்குப் போறேன் கம்ப்யூட்டர் கம்பெனி..."

"எப்படிப் போவே...?" என் மனைவி கவலையுடன் கேட்டாள்.

"டவுன் பஸ்தான்..."

"கார்த்தால எட்டு மணிக்குக் கிளம்பினா ராத்திரி எட்டாயிடும் வர... ஒன்பது கூட ஆகும் ஒவ்வொரு நாளைக்கு" என்றார் மாமி. "மழை கிழை பெய்ததுன்னா அங்கயே ஒண்ணு விட்ட அக்கா அகத்துல தங்கிடுவா... போன் பண்ணித் தகவல் சொல்லிடுவா... நல்ல வேளையா இன்னிக்கு ஞாயித்துக் கிழமை... டூட்டிக்குப் போகலை..."

"சம்பளம்...?" என்றேன்.

"மூவாயிரம் தரா மாமா..."

வெறும் மூவாயிரம் சம்பளத்துக்கு இந்த கட்டை வண்டிப் பாதையில் இரவும் பகலும் பயணம் போய் உழைத்துக் களைத்துத் திரும்பும் அந்தக் குழந்தையை ஏறிட்டுப் பார்த்தேன். எந்த எதிர்பார்ப்புகளும் இல்லாத தெளிந்த கண்களும், மலர்ந்த சிரிப்புமாக அவள் என்னை நோக்கினாள்.

"வேற வேலை பண்ணி வைச்சா போவியாம்மா...?"

அவளை பதில் சொல்லவிடாமல் தாயார் குறுக்கிட்டார்: "கல்யாணம் பண்ணணுமே..."

இதற்குள் சாஸ்திரிகள் தாம் விருது வாங்கிய செய்தி நகலை எடுத்து வந்து காண்பித்தார்... "எனக்கே தெரியாதுண்ணா... பேப்பர்ல பார்த்துட்டு திருச்சிலேருந்து போன் பண்ணினா. அப்புறம்தான் நானே வாங்கிப் பார்த்தேன்... தபால் வந்தது..."

## Mr.மெட்ராஸ்



"ரொம்பப் பெருமையா இருக்கு சாஸ்திரிகளே..."

திடீரென்று தோளுக்கு மேலாக திருநீறு வாசனை பலமாக தவழ்ந்து வர, திரும்பிப் பார்த்தேன்... அத்தனை நேரமாக மனத்துக்குள் மெல்ல மெல்ல எழுந்து நின்ற மகிழ்ச்சி கோபுரம், சரசரவென்று சரிந்து என் காலடியிலேயே விழுந்தது.

திருநீறு துலங்கும் நெற்றியுடன் எங்கள் பின்னால் நின்ற இளைஞனின் கனத்த உதடுகள் கோணலாய் விரிந்திருந்தன. உமிழ்நீர் நூலிழையாய் இறங்கி வந்து ஒரு சொட்டு அந்தப் பழைய தரையிலும் விழுந்தது. கோணலாய்த் திரும்பிய கழுத்திலே சிவப்புக் கயிற்றில் கோத்த ஒற்றை ருத்ராட்சம். மெலிந்த புஜங்களும் சூம்பிய கைகளும் மானுடத்தின் சோகத்தைத் தேக்கி நின்றன. பெரிய நெற்றியின் கீழ் விரிந்த கருங்கிணற்று விழிகளில் இனந்தெரியாத அச்சம் நிரந்தரமாய்க் குடிகொண்டிருந்தது.

நான் பார்த்துவிட்டதைப் பார்த்த ராமமூர்த்தி சாஸ்திரிகள், பத்திரிகைச் செய்தியை பத்திரப்படுத்தும் சாக்கில் அகன்று கொண்டார். அத்தனை நேரமும் கூடத்தை யொட்டிய இருட்டறையில் இருந்திருக்க வேண்டும் அந்த இளைஞன். அவன் கண்களை நேருக்கு நேர் சந்தித்தபோது அந்தப் பார்வையின் தீக்ஷண்யத்தைச் சகிய இயலாமல் தலைகுனிந்தேன். தரையில், அவன் வாயிலிருந்து சிந்திய உமிழ்நீர் மினுக்கி ஏளனம் செய்தது.

'கடவுளே!' என்று துக்கம் தாளாமல் கத்தத் தோன்றியது. கூடத்தில் கலகலத்துக் கொண்டிருந்த எனது குடும்பத்தினர் கவனிப்பதற்குள் அவன் மெல்ல அகன்று வாசற்படி தாண்டி வெளியேறிவிட்டான்.

திரும்பி வந்த சாஸ்திரிகளிடம் பதறினேன்... "வெளியில போறானே..."

"போகட்டும்... ஒருத்தரையும் ஒண்ணும் பண்ணமாட்டான்.... என் பிள்ளைதான்... பேரு சாம்பு" என்றார் மெதுவாக.

நல்லூரைவிட்டுக் கிளம்பியபோது, வீதி முனையில் நின்றிருந்த சாம்பு எழுப்பிய ஓலத்தை இன்னமும் சில இரவுகளில் கேட்டு விழித்துக் கொள்கிறேன்.

"என்ன ஊளையிடற சத்தம்...?" என்று குவாலிஸின் கண்ணாடியை ஏற்றிக் கொண்ட என் குடும்பத்தாருக்கு அன்று எந்தவித விளக்கமும் நான் கூறவில்லை.

சாம்புவுக்கு ஏதேனும் செய்யவேண்டும் என்று மட்டும் நெருஞ்சி முள்ளாக மனசாட்சி வதைத்தது. மெச்சூர் ஆன ஒரு ஃபிக்ஸட் டெபாஸிட்டைக் காசாக்கி யாரும் அறியாமல் ராமமூர்த்தி சாஸ்திரிகளுக்கு அனுப்பினேன். இருபத்தைந்தாயிரம் ரூபாய் வைப்பு நிதியாக சாம்பு பெயரில் போட்டு வைத்து ஒரு கார்டியனை நியமித்தால் நல்லது என்று கடிதம் எழுதினேன். நான்கே நாட்களில் பதில் வந்தது:

'பணம் அனுப்பியதற்கு ரொம்ப சந்தோஷம். இப்படி ஒரு சகோதரனை அடைந்த சாரதாவுக்குக் கல்யாணம் ஆவதுதான் மெத்தக் கடினம் என்பதால், அந்தப் பணத்தை அவள் ஸ்ரீதனத்துக்காக வைத்துக் கொள்கிறேன். சாம்புவை என் காலம் வரைக்கும் நான் பார்த்துக்கொள்வேன். அதற்குமேல் பகவான் வழிவிடுவான் பார்ப்போம்...'

"என்ன எழுதியிருக்கார் சாஸ்திரிகள்...?" என்று கேட்டபடி வந்த என் மனைவியிடம் சொன்னேன்:

"சாரதாவுக்குக் கல்யாணத்துக்குப் பார்க்கறாராம்... நல்ல' வரனாயிருந்தா சொல்லச் சொல்றார்..."

அவள் அகன்றதும் மீண்டும் ராமமூர்த்தி சாஸ்திரிகளின் கடிதத்தைப் பிரித்து, நம்ப முடியாமல் எழுத்துகளைப் பார்த்தபோது திருநீறு வாசனை அலை அலையாக எழுந்து வதைத்தது. ○

## மு.க.ஸ்டாலின்



இதுநாள் வரை வெறிச்சோடிக் கிடந்த தி.மு.க இளைஞரணி அலுவலகமான 'அன்பகம்', தேர்தல் சமயத்தில் ஸ்டாலினுடன் கூட்டணித் தலைவர்கள் பேசுவதற்கென்றே தயாராகி வருகிறது.

"ஆர்க்கிடெக்ட் சேருன்னு அம்மா, அப்பவே படிச்சுப் படிச்சு சொன்னாங்க. நான் கேக்கவேயில்லை. ஹூம்... ஒரு வேளை சேர்ந்திருந்தா கணபதி ஸ்தபதிக்குப் போட்டியா நான் கூட நிறைய சிற்பங்கள் வடிச்சிருப்பேன்!'' என்றபடியே ஆரம்பித்தாள் ஸ்ரேயா.

"நீயா? உனக்கு பென்சிலே ஒழுங்கா சீவத் தெரியாது. இதுல சிற்பம் வேறயா? அது சரி, என்ன திடீர்னு கணபதி ஸ்தபதி?'' என்றான் வஸந்த்.

"போன வாரம்தான்பா அவரோட வாழ்க்கை வரலாறு படிச்சேன். புக் பேரு 'சிற்பிக்குள் கண்டெடுத்த முத்துக்கள்.' கண்டெடுத்தவங்க இராஜலஷ்மி இராமநாராயணன்.''

"எப்படியிருக்கு?''

"நிறைய விஷயங்கள் இருக்கு. கூடவே ஃபோட்டோஸும். தெரியுமா, வாஸ்து சாஸ்திரம் பத்தி அவரு நிறைய ஆராய்ச்சி செய்திருக்காரு. அமெரிக்காவுல கூட கோயில் கட்டியிருக்காரு... ஆனா, புக்கை படிக்கிறப்போ துணைப்பாட கட்டுரை வாசிக்கிற மாதிரி இருக்கு. கொஞ்சம் மாடர்ன் லாங்குவேஜ்ல எழுதி யிருக்கலாம்.''

"நீ ஏன் என்னோட வாழ்க்கை வரலாற்றை மாடர்னா எழுதக் கூடாது?''

"ஸாரி, நான் மனுஷங்களைப் பத்தி மட்டும்தான் எழுதுவேன்.''

"நீ கொடுத்து வச்சது அவ்வளவுதான். வெல், நானே ஒரு பத்திரிகை ஆரம்பிச்சு, நானே என்னோட சுயசரிதையை எழுதிக்கறேன்.''











"ஹலோ! பத்திரிகை ஆரம்பிக்கறது உனக்கு அவ்வளோ ஈஸியா பேச்சா? தீபம் நா. பார்த்தசாரதி பத்தி என்கிட்ட ஒரு புக் இருக்கு. பேரு 'எழுத்து உலகின் நட்சத்திரம்'. படிச்சுப் பாரு. அப்பத்தான் பத்திரிகை ஆரம்பிக்கறது பத்தியும் அதைத் தொடர்ந்து நடத்தும்போது ஏற்படற பிரச்னைகளைப் பத்தியும் தெரிஞ்சுப்பே. வல்லிக் கண்ணன் தொகுத்திருக்காரு. ரொம்ப சுவாரஸ்யமா இருக்கு. அது சரி, நீ நா.பா

படிச்சிருக்கியா?"

"படிச்சிருக்கியாவா? அவர் என்னோட ஃபேவரிட்... பை தி வே உனக்குப் போட்டியா நான் ஒரு புக் படிச்சேன். பேரு காசோலைகள். செக் புக் பத்தி புட்டுப்புட்டு வைச்சிருக்காரு எம். ராமச் சந்திரன். தமிழ்ல கையெழுத்து போடலாமா, எழுதப் படிக்கத் தெரியாதவங்க எப்படி பேங்கிங் செய்யறாங்க, ஜாயிண்ட் அகௌண்ட்னா என்ன... இப்படி நிறைய விஷயங்கள் இருக்கு. இந்த மாதிரி இன்ஃபர்மேடிவா நிறைய புக்ஸ் தமிழ்ல வரணும்."

"கிரெடிட் கார்ட் பத்தி இருக்கா?"

"டெபிட் கார்ட் பத்திக்கூட இருக்கு."

"நாளைக்கு வரும்போது எடுத்துட்டு வா."

"முதல்ல எனக்கு பதில் சொல்லு. என்னோட பயோகிராஃபியை யார் எழுதுவாங்க?"

"உன்னைப் பத்தித்தான் ஏற்கெனவே டாக்குமெண்டரி எடுத்துட்டாங்களே... நீ அனிமல் ப்ளான்ட் பார்க்கறதில்லையா?" என்று ஸ்ரேயா சொல்லவும் அவளைத் துரத்திக்கொண்டு ஓடுகிறான் வஸந்த்.

**சிற்பிக்குள் கண்டெடுத்த முத்துக்கள் - இராஜலஷ்மி இராமநாராயணன்**

தெஷினா கலைநூற் பதிப்பகம், 46, முதல் அவின்யூ, வெட்டுவாங்கேணி, ஈஞ்சம்பாக்கம், சென்னை - 600 041. பக்கம் 334, விலை ரூ.200.00

**எழுத்து உலகின் நட்சத்திரம் தீபம். நா. பார்த்தசாரதி - தொகுப்பாசிரியர்: வல்லிக்கண்ணன்.**

ஞானரடிகள் தமிழ் மன்றம், ப.எண்.7, பு.எண்.17, நாகமணி தெரு, சிந்தாதிரிப் பேட்டை, சென்னை - 600 002. பக்கம் 117, விலை ரூ.40.00

**காசோலைகள் - எம். ராமச்சந்திரன்**

வசந்த் பதிப்பகம், எண். 151, 6வது தெரு, கம்பர் நகர், சென்னை - 600 099 பக்கம் 160, விலை ரூ.60.00

## ஜி.கே.வாசன்



**வா**சன் ஆதரவாளர்கள் அவருடைய பெயரைப் பச்சைக் குத்திக் கொண்டது போல இளங்கோவன் ஆதரவாளர்களும் பச்சை குத்தி, விசுவாசம் காட்ட முயன்றார்களாம். விஷயம் கேள்விப்பட்ட இளங்கோவன், "நான் ஊரையே கிண்டல் பண்ணுவேன்... அதனால என்னை இன்னொருத்தர் கிண்டல் பண்ற மாதிரி எதுவும் செய்துடாதீங்க" என்று சம்பந்தப்பட்டவர்களைக் கடுமையாக எச்சரித்து விட்டாராம்.



## இளங்கோவன்

உள்ளங்கையில் உலகம்

பானிக் தொடர்

# விருந்தோம்பல் என்னும் விஷம்!

சுதாமூர்த்தி

இரண்டு வருடங்களுக்கு முன்னால், என் சிநேகிதி சுமன், என்னுடன் வந்து தங்கியிருந்தாள். கடந்த 25 வருடங்களாக அவள் அமெரிக்காவில் வசித்தாள். அவளுடைய எடை, உணவில் கலோரி அளவு, எல்லாவற்றிலும் மிகக் கவனமாக இருப்பாள். காரணம், அவள் குடும்பத்தில் ஹார்ட் அட்டாக்கும், பிளட் பிரஷரும் பரம்பரையாகவே இருந்து வந்தது. அவளுக்கு பெங்களூரிலும், தார்வாரிலும் நிறைய சிநேகிதிகள். அவர்களை எல்லாம் சந்திக்க வேண்டும் என்பதற்காகத்தான் வந்திருந்தாள். அவள் குழந்தைகள் வளர்ந்துவிட்டார்கள். இந்தியாவுக்கு வர மறுத்துவிட்டார்கள். சுமனுக்குச் சுதந்திரம் உண்டு. எனவே அவள் எத்தனை நாள் வேண்டுமானாலும் தங்கி இருக்கலாம்.

எப்போதாவது அவள் உறவினர்களைச் சந்திக்கப் போகையில் நானும் கூடவே போவதுண்டு. நான் சுமன் வீட்டுக்குச் சென்றபோதெல்லாம் அவள் வாழ்க்கை முறையைப் பார்த்ததுண்டு. டயட்டில் இருப்பாள்; உடற்பயிற்சி செய்வாள்; நடப்பாள்; தியானம் செய்வாள். கிட்டத்தட்ட நான்கு மணி நேரம் தேக ஆரோக்கியத்துக்காக மட்டுமே செலவழிப்பாள். பள்ளிக்கூடத்தில் படிக்கிற நாளில் அவள் சற்று குண்டாக இருப்பாள். காரணம், இனிப்பு வகைகள் சாப்பிடுவதில் அவளுக்கு அதிக விருப்பம். இப்போது சர்க்கரை சேர்த்த எந்தத் தின்பண்டத்தையும் அவள் தொடுவதே இல்லை. "எப்படி உன் நாக்கைக் கட்டிப்போட்டு வைத்திருக்கிறாய்?" என்று கேட்டேன்.

"அது அவ்வளவு எளிதல்ல. இருந்தாலும் நான் பழகிவிட்டேன். சில வேளைகளில் எனக்கு இனிப்பு பட்சணம் தின்ன வேண்டும் என்று தோன்றும். அதனாலேயே வீட்டில் எந்த இனிப்பும் வைப்பதில்லை!" என்றாள் குரலில் சோகம் வெளிப்பட.

இந்தியாவில் விருந்தினர் கடவுளுக்குச் சமானம். பாரம்பரியமாகவே நாம் விருந்தினர்களை கௌரவித்து வந்திருக்கிறோம். என் அனுபவத்தில், பல வீடுகளில், மிகச் சிறந்ததை விருந்தினர்களுக்குக் கொடுப்பார்கள். அவர்களை உபசரிப்பதில் அத்தனை மகிழ்ச்சி. தங்களையும் மீறி, அவர்களை மகிழ்ச்சிக்குள்ளாக்குவதில் அவர்கள் திருப்தியடைவார்கள். இது நகரங்களை விட, கிராமப்புறங்களில் அதிகம்.

எங்கள் இருவருக்கும் தோழியான ஜெயாவின் வீட்டுக்குப் போனோம். அவளுக்கு உடல்நலம் சரியில்லை. இருந்தாலும் எங்களைப் பார்த்ததும் ஒரே மகிழ்ச்சி. நாங்கள் உட்கார்ந்து கொண்ட உடனேயே உள்ளே ஓடிப்போய் தம்ளர்களில் குடிக்கத் தண்ணீரும், இரண்டு தட்டுகளில் இனிப்பும் கொண்டு வந்து வைத்தாள். வெவ்

# 11



வேறு வகை இனிப்புகள் என்றாலும், அவற்றின் மூலப் பொருள்கள் நெய்யும், சர்க்கரையும்தான். 'வேண்டாம்' என்று சொல்லவும் முடியவில்லை. சாப்பிடவும் கஷ்டமாக இருந்தது. நாகரிக சமூகங்கள் போல் அல்லாமல், விருந்தினர் எல்லாவற்றையுமே உண்டு மகிழ வேண்டும் என்று நண்பர்கள் குடும்பங்களில் எதிர்பார்க்கிறார்கள். எதையாவது மீதி வைத்தால் அது அவர்களை வருத்தம்கொள்ள வைத்துவிடுகிறது. சுமன் இனிப்புகளைப் பார்த்ததும் தடுமாறிப் போனாள். அவளுக்கு விருப்பமிருந்தாலும் அவள் டயட்டில் இருந்தாள். நேரே பார்க்காத வரை, ஆசை எழாது; ஆனால் பார்த்து, நாக்கில் நீர் ஊறும்போது தர்மசங்கடமாக இருக்கும். சுமனால் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியவில்லை. இனிப்புகளை எல்லாம் சாப்பிட்டாள். தட்டில்

இருந்ததை முடித்தோமோ இல்லையோ, ஜெயா மறுபடியும் சில இனிப்புப் பண்டங்களை எங்கள் முன் வைத்தாள்.

"நீங்கள் இந்தப் பாயசத்தைச் சாப்பிட வேண்டும். தெற்கே இது பாரம்பரிய உணவு. ஆனால் ஒவ்வொரு மாநிலத் துக்கும், ஊருக்கும் இதன் தயாரிப்பு மாறிக்கொண்டே இருக்கும். இதற்குப் பெயர் அப்பாவி பாயசம். ஒரு முழு பிற் பகலை இதைச் செய்வதற்காகவே செல விட்டேன். உங்களுக்காகவே இதைப் பண்ணினேன்!" என்றாள் ஜெயா.

சுமன் இந்தத் தடவை தீர்மானமாக மறுத்துவிட்டாள். எனக்கு டயட் ஏதும் கிடையாது. நான் பாயசத்தை அருந் தினேன். நான் சாப்பிட்டதில் ஜெயா வுக்கு மகிழ்ச்சி என்றாலும், சுமன் எடுத் துக் கொள்ளவில்லையே என்பதில் அவளுக்கு வருத்தம்தான்.

"சுமன், ஏன் பாயசத்தைச் சாப்பிட வில்லை? உங்களை மாதிரி நாங்கள் பெரிய பணக்காரர்கள் அல்ல. ஆனால், நான் மிகுந்த அன்புடன் இதைத் தயா ரித்தேன். இது உனக்கு அமெரிக்கா விலோ, கடைகளிலோ நிச்சயம் கிடைக்காது. நீ அமெரிக்கா போய் உன் 'டயட்'டை எல்லாம் பார்த்துக்கொள். இந்தியாவுக்கு வந்துவிட்டு, எங்களை எல்லாம் பார்க்க வேண்டும் என்று வந்தால், 'டயட்'டை மறந்துவிடு!" என்றாள்.

சுமனுக்கு அழுகையே வந்துவிட்டது.

"ஜெயா, கட்டாயப்படுத்தாதே. நீ ஆசையோடுதான் செய்திருக்கிறாய். ஆனால் அவள் முடிவுக்கு விட்டுவிடு!" என்றேன்.

சுமனுக்காக நான் பரிந்து பேசியதில் ஜெயாவுக்கு இன்னும் வருத்தம். "நான் வற்புறுத்தினால் அவள் கட்டாயம் சாப்பிடுவாள். இது உடம்புக்கும் நல்லது. சுமன், உன் தாத்தாகூட இந்தப் பாய சத்தை மிகவும் விரும்பிச் சாப்பிடுவார். அவர் என் தாத்தாவின் நண்பராயிற்றே. அவர் ஒல்லியாக இருப்பார். நிறைய இனிப்புகள் சாப்பிடுவார். அவர் 'டயட்'டே இருந்ததில்லை!"

"அது உண்மைதான். என் பாட்ட னார் கிராமத்தில் வசித்தார். நெல் வயல் இருந்தது அவருக்கு. ஒரு நாளைக்குப் பத்து மைல் நடப்பார். அவருடைய உணவின் கலோரிகள் அத்தனையும் அவர் நடையில் எரிந்து போய்விடும். என் பாட்டி அவளுடைய முதுமை யான வயதிலும் நடந்து போய், கிணற்றி லிருந்து தண்ணீர் எடுத்துக்கொண்டு வருவாள். எங்கள் வாழ்க்கை முறையே



## புள்ளி விவரப் புலி!

**கா**ணாமல் போகும் குழந்தைகளின் எண்ணிக்கை ஒவ்வொரு வருடமும் அசாமில் அதிகரித்துக் கொண்டேயிருக்கிறது. 2002ல் 679 குழந்தைகளும், 2003ல் 684 குழந்தைகளும் காணாமல் போயிருக் கின்றனர். சென்ற வருடம் மட்டும் 670 குழந்தை களைக் காணவில்லை. அவர்களுள் 349 பெண் குழந்தைகளும் அடக்கம். 217 குழந்தைகள் மட்டுமே இதுவரை கண்டுபிடிக்கப்பட்டுள்ளனர். இக்குழந்தை கள் பெரும்பாலும் மும்பை, சிலிகுரி, கொல்கத்தா போன்ற பகுதிகளுக்குக் கடத்திச் செல்லப் படுகின்றனர்.

வித்தியாசமாயிருந்தது. தயவுசெய்து வற்புறுத்தாதே!" சற்று வருத்தத்துடனேயே ஜெயா வீட்டிலிருந்து கிளம்பி வந்தோம்.

**சு**மன் திரும்பும் நாள் வந்தது. அவள் ஐந்து கிலோ எடை கூடியிருந்தாள். சுமனுக் குக் கவலையாகிவிட்டது. "நான் ஒரு தம்ளர் சாதாரண நீர் குடித்தால்கூட அது நெய்யாகிவிடுகிறதோ என்னவோ! நான் சீக்கிரத்திலேயே எடை அதிகமாகி விடுவேன். அப்புறம் அதைக் குறைப் பதற்கும் முடியாது. துரதிர்ஷ்டவசமாக, விருந்தோம்பல் என்றால் ஏராளமான உணவு வகைகளையும் இனிப்புப் பண்டங்களையும் கொடுப்பதுதான் என்று மக்கள் நினைக்கிறார்கள். எல்லார் வீட்டிலும், அவர்கள் தரும் உணவுப் பொருள்களை நிராகரித்தால் தவறாக நினைத்துக் கொள்கிறார்கள். அந்த அதிகப்படியான உணவு அவர்களுக்கு விஷம்போல என்று நினைப்பதே இல்லை. இனிப்புப் பண்டங்கள் தயா ரித்தால்தான் செல்வச் செழிப்பு இருக் கிறது என்று தவறாக நினைக்கிறார்கள். அந்தக் காலம் எல்லாம் போய்விட்டது. இன்று எல்லோருமே உடல் எடையை யும், ஆரோக்கியம் தரும் உணவு வகைகளைப் பற்றியுமே நினைக்கிறார் கள்" என்றாள்.

சரி, விருந்தோம்பல் என்றால் என்ன?

விருந்தாளி வெளிப்படையாகப் பேச வேண்டும், இருப்பதை நம்முடன் இயல்பாகப் பகிர்ந்துகொள்ள வேண்டும். விருந்தாளிக்கு எந்தவித அசௌகரியமும் இருக்கக் கூடாது. இந்த ஆதாரமான கொள்கையை மறந்துவிட்டோம். விருந்தோம்பல் என்றால் ஏராளமான உணவு வகைகளைத் தயார் செய்வதும், திரும்பத் திரும்ப வற்புறுத்தி உண்ண வைப்பதும் தவறு. விருந்தாளி வேண் டாதபோது திணிக்காமல் இருந்து, மனம் வருத்தப்படாமல் இருக்க வேண்டும். விருந்தாளிக்கு உபசாரமாக ஏதாவது உண்ணக் கொடுக்க வேண்டும் என்பது நியாயம்தான். ஆனால் அவர் மறுத்தால் தவறாக எண்ணக்கூடாது.

*(அடுத்த இதழில் முடிக்கிறேன்)*

# வலைபாயுதே

# கூகுலுக்குத் தடா!



### வித்தியாசம் :

ஓவியங்கள் எப்படி வரையலாம்? 'கையாலதான்'னு பதில் சொல்லி கடிக்காதீங்க. ஏதாவது விபத்திலோ, இல்ல வேறெந்த வகையிலோ கைகளை இழந்து வாய் மூலமாகவோ, கால் மூலமாகவோ திறமையா வரைபவர்களும் உண்டு. இந்த அபூர்வ திறமையுள்ள ஓவியர்களை ஊக்குவிக்க இயங்கும் தளம் www.mfpausa.com. (mfpa - mouth and foot painting artists, usa.). *1956ல்* அமெரிக்காவில் ஆரம்பிக்கப்பட்டது இந்த அமைப்பு. இத்தளத்தின் மூலம் உலகத்தின் எந்த மூலையில் உள்ள ஓவிய ஆர்வலர்களும் தங்களை மெருகேற்றிக் கொள்ள முடியும். இதுபோக இந்த அமைப்பு, அந்த ஓவியர்களுக்கு நிதி உதவியும் செய்கிறது. அவ:'களின் ஓவியங்களை கண்காட்சி வைக்கவும் உதவுகிறது.

### மெயிலில் கூகுள் :

நிறைய பேரோட கம்பெனிகளில் கூகுள் உபயோகிக்கத் தடா இருக்கு. *(அது என்னு தெரியலை!)* இல்லாட்டி சில சமயங்கள்ல உங்களுக்கு கூகுள் தளம் எடுக்காம போகலாம். ஆனா, உங்களுக்கு கூகுள்ல தேட வேண்டிய அவசரம் இருக்கலாம். என்ன பண்ணுவீங்க? google@capeclear.com என்ற முகவரிக்கு நீங்க தேட வேண்டிய விஷயத்துக்கான கீ-வேர்டை *(உதாரணம் : சானியா மிர்சா)* மட்டும் சப்ஜெக்ட்ல டைப் பண்ணி அனுப்புனா போதும். ரிசல்ட் உங்க மெயில் தேடி வந்துரும்.




### வலைப் பதிவு :

இன்றிலிருந்து நியூயார்க் டைம்ஸ் ஒரு புதிய பத்தியைத் துவங்கியிருக்கிறது. தன்னுடைய பதிப்புகளில் வெளியாகும் தவறுகள், இனிமேல் நியூயார்க் டைம்ஸின் For the Record பகுதியில் வெளியிடப்பட்டு நிரந்தரமாக்கப்படும். நவீன தகவல் உலகில், தவறான தகவல்களின் இடம் மிகவும் முக்கியமானது. நியூஸிலாந்தில் வெளியாகும் ஓர் உள்ளூர் செய்திப் பத்திரிகையின் இணைய வடிவை ஒட்டி, வெளிகலாவின் முதன்மை நாளேட்டில் ஒரு கட்டுரை வெளியாகிறது. இது செய்திகளைப் போலவே தவறுகளையும் எளிதில் பரப்புகிறது. மேற்கொண்டு தேடல் இயந்திரங்கள், தகவல் கிடங்குகள் என்று தவறு நிரந்தரப்பட்டுப் போகிறது. இந்த நிலையில் எங்கெல்லாம் தவறுகள் தெரியவருகின்றனவோ, அங்கே அவற்றை உடனடியாக அங்கீகரித்தல் முக்கியம். இந்த வகையில் நியா. டை-யின் இன்றைய துவக்கம் பாராட்டப்பட வேண்டியது. (www.domesticatedonion.net/blog/?item=619 வலைப் பதிவிலிருந்து.)

**- வலைஞன்**



# "எப்படி இருக்கு?"

அந்த வார 'தாமரை' இதழை வாங்கிப் பார்த்த இளங்கோ, சந்தோஷத்தில் துள்ளிக் குதித்தான். அவன் எழுதிய கதை அதில் வெளியாகியிருந்தது. தாமரை லட்சக்கணக்கில் விற்பனையாகும் பத்திரிகை. இளங்கோவுக்கு அதுதான் முதல் கதை. அவனுக்கு சந்தோஷத்தில் தலைகால் புரியவில்லை.

தன் நண்பர்கள் கணேஷ், சுரேஷ், ராம், ரவீந்தரிடம் காண்பிக்க வேண்டும் என்று விரும்பினான் இளங்கோ. சந்தோஷம், துக்கம் எதுவாயிருந்தாலும் அவன் அவர்களுடன்தான் பகிர்ந்து கொள்வான். மணியைப் பார்த்தான். பத்து மணி. இந்நேரத்துக்கு வழக்கமாக அவர்கள் கூடும் இடத்துக்கு வந்திருப்பார்கள். சைக்கிளில் விரைந்தான் இளங்கோ.

"வாடா... என்னடா, இன்னைக்கு லேட்?"

"... இங்க பார்த்தியா... இந்த வார 'தாமரை'ல நான் எழுதின கதை வந்திருக்கு..." சந்தோஷமாகச் சொன்னான் இளங்கோ.

"கங்க்ராட்ஸ்டா'.. பாவம்.. இதுக்காக எவ்வளவு கஷ்டப்பட்டே..." என்றான் சுரேஷ்.

"சாதிச்சுட்டே மச்சி... 'தாமரை'ல கதை வர்றது என்ன, சாதாரண விஷயமா...?" - இது கணேஷ்.

"இது போதாது இளங்கோ... நீ இன்னும் நிறைய எழுதணும்..." கைகொடுத்து வாழ்த்தினான் ரவீந்திரன்.

"எப்படா ஸ்வீட்டோட பார்ட்டி குடுக்கப் போறே...?" என்றான் ராம்.

"அதெல்லாம் இருக்கட்டும்... என் கதையைப் படிச்சுட்டு எப்படி இருக்குன்னு சொல்லுங்க மொதல்ல..." பெருமை பொங்க நண்பர்களிடம் கொடுத்தான் இளங்கோ.

'நான், நீ' என போட்டி போட்டுக் கொண்டு படித்தார்கள். வித்தியாசமான சிந்தனையுடன், விறுவிறுப்பான நடையில் எழுதப்பட்ட நல்ல கதை அது. படித்துவிட்டு கண்டிப்பாகப் பாராட்டத்தான் போகிறார்கள். ஆவலுடன் காத்திருந்தான் இளங்கோ.

கால் மணி நேரம் ஆயிற்று. படித்துவிட்டு பத்திரிகையை இவனிடம் திருப்பித் தந்தார்கள்.

"எப்படிடா இருக்கு கதை...?" பாராட்டு மழையில் நனையத் தயாரானான் இளங்கோ.

"கதை இருக்கட்டும்டா... இதுக்குப் பணம் எவ்வளவு கிடைக்கும்?" என்றார்கள் கோரஸாக. ○

**கே.ஆனந்தன்**

ராத்திரி எத்தனை மணிக்கு 'மொட்டை' மாடியில் அமர்ந்து யோசிப்பாரோ... ஜெயா டீ.வி.யில் 'சிரிகிரி ஸ்டேஷன்' நிகழ்ச்சி வழங்கும் பாஸ்கிக்கு மட்டும்தான் இப்படி எடக்கு மடக்கான கேள்விகள் மண்டையில் உதிக்கும்.

'அஞ்சு வயசுப் பையன் பொறந்து எத்தனை வருஷம் இருக்கும்?'

'ஐஸ்கட்டி உருகி தண்ணியாகறதுக்கு முன்னால எப்படி இருந்தது?'

'வெள்ளை மாளிகையின் கலர் என்ன?'

'இந்திய நாட்டின் தலைநகரான 'டெல்லி' எந்த நாட்டில் உள்ளது?'

சிலிர்க்க வைக்கும் அவரது நிகழ்ச்சியின் கேள்விகளை நினைத்துக்கொண்டே பார்ட்டியைச் சந்தித்தோம்.

"ஆக்சுவலா, இந்தப் பண்டிகை தினங்கள்ல வி.ஐ.பி.களை கூப்பிட்டுக் கேள்வியிலேயே பதிலை ஒளிச்சு வைச்சு, கஷ்டமான கேள்விகளைக் கேட்பாங்க. இப்போ அதைத்தான் நான் விரிவா பண்றேன். என்னோட முந்தைய நிகழ்ச்சிகளைப் பார்த்துட்டு டெல்லி கணேஷ், என்னைத் தடை செய்யணும்னு கோட்டைக்கே புறப்பட்டாருன்னு கேள்விப்பட்டேன். ஆனா, அவர்கிட்ட நான் விளக்கம் கொடுத்த பிறகு நிகழ்ச்சியில கலந்துக்கிட்டார். விதவிதமா செயின் போட்டு வந்த சங்கர் கணேஷ்கிட்ட, 'இதுல எதைப் பிடிச்சு இழுத்தா ட்ரெயின் நிக்கும்'னு கேட்டேன். மனுஷன் கோவிச்சுக்கவேயில்லை.

ஆனாலும் சில நடிகர்கள் இந்த நிகழ்ச்சியில கலந்துக்கத் தயங்குறாங்க. சினிமாவுல வில்லன்கிட்டயும் ஹீரோயின்கிட்டயும் காண்பிக்கிற ஹீரோயிஸத்தை என்னிடம் காட்டலாமே. நான் ரெடி நீங்க ரெடியா" என்று முஷ்டி மடக்கியவரிடம் "ஏன் டீ.வி.களில் காமெடி நிகழ்ச்சிகள் ரொம்பக் குறைவா இருக்கு?" என்றோம்.

"நீங்க வேற. நம்ம ஊர் லேடீஸை சிரிக்க வச்சா ரொம்பக் கடுப்பாயிடுவாங்க. விட்டா கறுப்புக் கொடியெல்லாம் காட்டுவாங்க. அவங்களை அழ வச்சாத்தான் சந்தோஷமா ஏத்துக்குவாங்க" என்றார்.

அப்படியே அவரிடமிருந்து சிரிக்காமல் விடைபெற்று 'காமெடி குயின்' அர்ச்சனாவை சந்தித்தோம். வீட்டில் ஜாலியாக ரிப்பீட் 'காமெடி டைம்' பார்த்துக் கொண்டிருந்தவர், நம்மைக் கண்டதும் டீ.வி.யை அணைத்துவிட்டு வந்தார். "என்ன, ப்ரோக்ராம் எப்படியிருக்கு?" என்றோம்.

"நல்லா போயிட்டிருக்கு. எங்க நிகழ்ச்சியோட த்ரில்லே நாங்க இன்னார்தான்னு சொல்லாம நேயர்களை போன்ல கலாய்க்கறதுதான். லெட்டர் போட்டு ரொம்ப நாள் கழிச்சுத்தான் நாங்க கூப்பிடுவோம். இதனால எல்லோரும் எங்களை மறந்துடுவாங்க. அப்படியும் கண்டுபிடிக்கறவங்களை 'என்னங்க நாங்க பேங்க்லருந்து பேசறோம். நீங்க

# "ஹீரோயிசத்தை என்னிடம்

சேனல்

பாட்டுக்கு காமெடி டைம் அது இதுன்னு விளையாடதீங்க'ன்னு மிரட்டுவோம். 'கப்சிப்'னு ஆயிடுவாங்க. இந்த நிகழ்ச்சி ஆரம்பத்துல இதே ஸ்டைல்ல என்னை நிறைய பேர் கலாய்க்க ஆரம்பிச்சாங்க. ஆனா நான் உஷார் பார்ட்டியாச்சே.. மாட்டுவேனா?'' என்றவரிடம்,

"உங்க தமிழ்..." என்றதுதான் தாமதம்...

"அபாரம்தானே...! நான் தமிழ்ப் பொண்ணுங்க. அதுவும் காலேஜுக்குப் படிக்கப் போய் சென்னைத் தமிழ், கொலைகாரன் பேட்டைத் தமிழ் (அது எங்கிருக்கு?), கண்ணம்மாபேட்டைத் தமிழ்ன்னு எல்லாத்தையும் பட ஷோக்கா கத்துக்கினேம்ப்பா. சும்மா செத்த நேரம் கேக்குறியா கண்ணு...?'' என்றார்.

பயத்தில் ஓடியே வந்துவிட்டோம்.

- சிக்குபுக்கு

படங்கள் : ஸ்ரீஹரி



* அர்ச்சனா

* பாஸ்கி

# காட்டுங்க!”

மாறும் ஒன்றும்
மாறாத ஒன்றும்
சேர்ந்தாலே இயக்கம்; அந்த
மாறும் ஒன்றும்
மாறாத ஒன்றும்
எனக்குள்தான் அடக்கம்!
- ஸ்ரீகிருஷ்ணன்



# எங்கே என் கண்ணன்?

## இந்திரா செளந்தர்ராஜன்

ஓடத் தொடங்கிவிட்ட அந்த ரயிலுக்குள் ஓடிவந்து ஏறிய அந்த மனிதர், ஏறி இறங்கும் அந்த கதவுக்குப் பக்கத்திலேயே நின்று கொண்டார். ரயிலும் நன்றாக வேகம் எடுக்கத் தொடங்கியது.

சிறிது நேரத்திலேயே டி.டி. அந்தப் பக்கமாய் வந்து, அவரை ஏற இறங்கப் பார்த்தார். பார்க்கப் பரதேசி போன்ற தோற்றம். ஆனால் கண்களில் ஒரு தீட்சண்யம்.

"என்ன... வித்அவுட் டிக்கெட்டா?'' என்று டி.டி கேட்க, அவரோ இடுப்பு மடிப்பில் இருந்து டிக்கெட்டை எடுத்துக் காட்ட, டி.டிக்கு அவர் முகத்தில் அறைந்த மாதிரி இருந்தது. இருந்தும் விடவில்லை.

"இது ரிசர்வேஷன் கோச்... இந்த டிக்கெட்டுக்கு அன்ரிசர்வ்டு கம்ப்பார்ட்மெண்ட்லதான் வரலாம். இதுல வரக்கூடாது...'' என்றார்.

"ஓடி வந்ததுல கவனிக்கல... அடுத்த ஸ்டேஷன் வரவும் இறங்கி மாறிக்கிறேனே..." என்றார். அந்த பதில், அதைச் சொன்னவிதம் டி.டியை மேற்கொண்டு எதுவும் பேசவிடவில்லை... "சரி'' என்று நகர்ந்தார். பிறகு ஏதோ நினைப்பில் திரும்பி வந்தவர், "இங்க உக்காந்துட்டு வராதீங்க... உள்ள போய் என் சீட் ஒண்ணு காலியா இருக்கு. அங்க உக்காருங்க. அடுத்த ஸ்டேஷன் வரவும் நானே சொல்றேன்...'' என்றார்.

அவர் முகத்தில் ஓர் அர்த்தமுள்ள சிரிப்பு.

அந்த டிக்கெட்டைக்கூட அவர் காசு கொடுத்து வாங்கவில்லை. ஸ்டேஷனில் டிக்கெட் வாங்க வேண்டுமே என்று நினைத்த நொடி, ஒருவர் வந்து வாங்கிக் கொடுத்துவிட்டுப் போனார். இப்பொழுதுகூட உட்கார இடமில்லையே என்று அவர் உள்ளுக்குள் எண்ணியிருக்க

வேண்டும்... அதுதான் டி.டி. மனதுக்குள் புகுந்து அவரை உட்காரும்படிச் சொல்லி விட்டது.

அவரும் உள்ளே போய் ஒரு பெரிய தகரப்பெட்டி உள்ள சைட் லோயர் பர்த்தில், ஓர் ஓரமாய் உட்கார்ந்துகொண்டார். எதிரிலேயே சீனுவும் ராஜமும் அமர்ந்திருக்க, அவர்களுக்கு நடுவில் மேலே உள்ள அந்த இரும்பு ஸ்டாண்டில் அந்த மூங்கில் பிரம்புப் பெட்டி. அதை ஒரு பார்வை பார்த்தவர், வானத்தில் பறக்கும் கருடனைப் பார்த்துக் கன்னத்தில் போட்டுக்கொள்வது போல கன்னத்தில் போட்டுக்கொண்டார். அதைத் தற்செயலாக ராஜமும் கவனித்தாள். அவர் அவளையும் பார்த்து மிருதுவாகச் சிரித்தார். கோரைப் புதர் போல தாடி, மீசை, சடை கட்டிக்கொண்ட தலைமுடி... பார்த்துச் சிரித்தால் எப்படி இருக்கும்? ராஜத்தை அந்தச் சிரிப்பு நெருடியது.

# 11

சீனு மனசுக்குள்ளோ ஒரே அலைபாய்ச்சல்... அவர் மனது நரசிம்மன் பிள்ளை கௌசிக்கோடு பேசியதிலேயே புரண்டுகொண்டிருந்தது. பார்வை மட்டும் கண்ணாடி ஜன்னலுக்கு அப்பால் நழுவியபடி இருக்கும் புறக்காட்சிகள் மேல் இருந்தது. ராஜம் அந்த மனிதர் பக்கம் பார்வையை விடாமல், அவளும் ஜன்னல் வழியே வெளியே பார்த்துக்கொண்டு வர ஆரம்பித்தாள். ஒரு ஐந்து நிமிடம்கூட ஆகியிருக்காது. மனசு என்பது யானை மாதிரி... அசைந்தபடியே இருப்பதுதானே அதன் குணம்? அதிலும் வலுக்கட்டாயமாக நாம் அதைத் திருப்பியிருக்கும் போது, அதுவும் அதே கட்டாயத்தில் திரும்பும். ராஜத்திடமும் திரும்பியது. இந்தமுறை அவள் பார்த்தபோது, அந்த மனிதர் பர்த் சீட்டில் சம்மணமிட்டவராக கண்களை மூடிக்கொண்டு தியானத்தில் மூழ்கி விட்டிருந்தார். ராஜத்தின் முகத்தில் ஆச்சரியம். சீனுவும் திரும்பினார். அவரும் கவனித்தார். அவரையும் ஆச்சரியம் தொற்றிக்கொண்டது.

''ராஜம் யார் இது?'' சன்னமான குரலில் அவர் கேட்க, ''தெரியல... பார்க்க பரதேசி மாதிரி இருக்கார். ஆனா ஏ.சி கோச்சுல டி.டி பர்த்ல உக்காந்துண்டு வரார். டி.டி வந்தாத் தெரியும்'' என்றவள், ''நம்ம பெரம்புப் பெட்டியை பார்த்துக் கன்னத்துல போட்டுண்டார்னா... எனக்கு ஒரே ஆச்சரியமா போயிடுத்து...'' என்றாள். அந்த வார்த்தைகள் சீனுவை சொரேல் என்று நிமிர்த்திற்று. உடனே அவரை கூர்ந்து பார்க்கத் தொடங்கினார்.

''என்னன்னா பாக்கறேள்...''

''உருவத்தை பார்த்து யாரையும் சாதாரணமா எடை போட்டுடக்கூடாது ராஜம். இப்பக்கூட இவர் நிஷ்டைல இருக்கறதைப் பார்த்தா எனக்கு இவர் மகான் மாதிரிதான் தெரியறது. என்வரைல இந்தப் பயணம் சாதாரணமானதா தெரியலை. ஒவ்வொரு சம்பவமுமே ஒரு அசாதாரணத்துக்குத் தன்றதா இருக்கு...'' என்றவர், அவரையே பார்த்தார். அவரி



டமோ அப்படி ஒரு ஆழ்ந்த தியானம்.

**வா**ரணாசி கடை வீதி. நெருக்கடிக்கே நெருக்கடி உண்டாக்கும் லட்சணத்தில் இருந்தது.

கணேஷ் ஒரு எஸ்.டி.டி பூத்துக்கு சென்று அனுமதி பெற்று ரிஸீவரை எடுத்து எண்களைச் சுழற்ற,

மறுமுனையில் அவன் அம்மா!

"கணேசா... எப்படிடா இருக்கே... கங்கைல தண்ணி எவ்வளவு தூரம் இருக்கு... குளிச்சியா..." என்று அதிலேயே முதல் நிமிடம் போய்விட்டது.

"அம்மா விஷயத்துக்கு வா... அக்கா சரண்யா விஷயத்துல வக்கீல் ஏதாவது சொன்னாரா?"

"எங்கடா... 'கொஞ்சம் அனுசரிச்சுப் போங்க. டைவர்ஸ் வாங்கிடலாம். ஆனா அப்புறம் உங்க பொண்ணுக்குத்தான் கஷ்டம். உங்க மாப்ளைக்கு இன்னொரு பொண்ணு கிடைச்சுடுவா. ஆனா உங்க பொண்ணுக்கு...'ன்னு அதே பல்லவியைப் பாடுறாருடா..."

"பேசாம வக்கிலை சமாதானத் தூதர் வேலைக்குப் போகச் சொல். யார்கூட வாழ முடியும்னு இருக்கு. முட்டாள்கூட வாழ்ந்துடலாம், முடவன்கூட வாழ்ந்துடலாம். ஆனா மூச்சுக்கு முந்நூறு பொய் பேசற சுயநலவாதியோடு வாழ முடியாது. இது தெரியாதா அந்த ஆளுக்கு..."

"சரிடா... இதை எல்லாம் நீ வந்து பேசிக்கோ... அப்புறம் உனக்கு ஒரு முக்கியமான விஷயம்."

"என்னம்மா?"

"உனக்கு மும்பை மாமா மகேஸ்வரனைத் தெரியும்தானே?"

"அவருக்கு என்ன?"

"அவர் உன் அப்பாவை மும்பை கடைத்தெருவுல பார்த்தாராம்."

"என்னம்மா சொல்றே...?"

"ஆமாம்ப்பா... அவருக்கு உன் அப்பா காணாமப் போன விஷயம் தெரியாது. மும்பை பக்கம் ஏதோ வேலையா வந்துருக்கறதா நினைச்சாராம். இங்க நம்ம வீட்டுக்கு வந்து என்கூட பேசும்போது தான் அவருக்கு விஷயம் தெரிஞ்சிருக்கு. 'நான் மும்பைல சாரை பார்த்தேனே'ன்னு சொன்னப்போ, எனக்கு சிலீர்னு இருந்தது... மும்பை போய் தேடினா உன் அப்பா கிடைச்சிடுவார்னு தெரியுது"

அவன் அம்மா குரல் உடைந்து பேசியது கணேஷைக் கீறியது.

"நீ விடும்மா... நான் பாத்துக்கறேன். இந்த அப்பா அங்க என்ன பண்றார்... நம்ப ஞாபகமே இல்லையாமா?"

"நானும் கேட்டேண்டா... தாடியும் மீசையுமா அவருக்கு அவர் ஞாபகமே இல்லேங்கற மாதிரி சொன்னார்டா..."

"சரிம்மா, நான் பாத்துக்கறேன். நீ கவலைப்படாதே. சுஜாதா ஒழுங்கா மருந்து சாப்பிடறாளா...?"

"சாப்பிடறாப்பா..."

"இந்த வாரம் அவளுக்கு அட்டாக் எதுவும் வரலியே..."

"இந்த நிமிஷம் இல்லை... இனி எப்படியோ?"

"நீ கவலைப்படாதேன்னு சொல்றேன்ல..."

"வார்த்தைல சொன்னா ஆச்சாடா... புருஷன் ஒரு பக்கம், வாழ முடியாத பொண்ணு ஒரு பக்கம், வியாதியோட இன்னொரு பொண்ணு... நீயோ எப்பவும் ஊர் ஊரா சுத்தற உத்யோகத்துல தவணை முறைல எங்ககூட தங்கறே... இப்படி வாழறதும் ஒரு வாழ்க்கையாடா?"

"அம்மா... பரம சுகமா வாழறதாம்மா வாழ்க்கை... இப்படி பலவித சவால்களுக்கு நடுவுல, அதுக்கு

**கூ**ட்டணி ஆட்சி பற்றி அதிரடியாகப் பேசிவந்த தா. பாண்டியன், இப்போதெல்லாம் கப்சிப். 'கூட்டணி ஆட்சி' என்று கேட்டாலே 'ஷட் அவுட்' ஆகிவிடுகிறார். என்ன நடந்துச்சோ?



தா.பாண்டியன்

## ப.சிதம்பரம்



மகளிர் சுய உதவிக் குழுக்கள் பற்றி எங்கெல்லாம் அ.தி.மு.கவினர் முழங்குகிறார்களோ, அங்கெல்லாம் காங்கிரஸ் சார்பாக பதில் கூட்டம் போட உத்தரவிட்டுள்ளாராம் ப.சி.

---

பலியாகிடாம போராடறதுதாம்மா எனக்குத் தெரிஞ்ச வாழ்க்கை...''

''என்னமோப்பா... உன் தைரியம்தான் எங்களுக்கு இருக்குற ஒரே பலம். அந்த ஆண்டவன் ஏன்தான் இப்படி சோதிக்கறானோ?''

''அம்மா... ஆண்டவனை ஏம்மா இழுக்கறே... அவருக்கு உன்னையும் என்னையும் சோதிச்சு என்னம்மா ஆகப் போகுது? நம்ம வாழ்க்கைக்கும் அவருக்கும் என்னம்மா சம்பந்தம்? நம்ம வாழ்க்கைங்கறது நம்ம கைல இருக்குற விஷயம்...''

"சரிடா... நான் தெரியாம உன்கிட்ட கடவுள் பத்திப் பேசிட்டேன். நீ வேளைக்குச் சாப்பிடு."

"சரிம்மா, நான் வெச்சுடறேன். அப்புறமா பேசறேன்...'' என்ற கணேஷ், ரிசீவரை வைத்துவிட்டு டிஜிட்டல் எழுத்துக்களைப் பார்த்தான். எண்பது ரூபாய் சில்லறை வந்திருந்தது. பணத்தை கொடுத்துவிட்டு வெளியில் வந்தான். அந்தச் சந்தடியில் ஒரு மாடு, பைக்காரன் ஒருவனால் காயம்பட்டு தொடைப் பரப்பில் ரத்தம் ஒழுக நின்றிருந்தது. எல்லோரும் எனக்கென்ன என்று போய் வந்தபடி இருந்தனர். கணேஷ் வரையில் அவன் மனத்தில் ரத்தம் வடிகிற மாதிரி இருந்தது. பக்கத்திலேயே ஒரு லஸ்ஸி கடை. அவரிடம் கேட்டான். பைக்காரன் இடித்துத் தள்ளிவிட்டுப் போனதைச் சொன்னவர், காயத்துக்கு மஞ்சளைக் குழைத்து பத்துப் போட்டால் சரியாகி விடும் என்று ஒரு உபதகவலையும் சேர்த்தே சொன்னார்.

"போடறதுக்கென்ன?"

"ஆமாம்... தெருவில சுத்தற மாடுக்கெல்லாம் மருந்து போடறதுதான் என் வேலை பார்."

அடுத்து அவனே தயாராகிவிட்டான். ஒரு நூறு கிராம் மஞ்சள் தூள் வாங்கி, அப்படியே தண்ணீரில் கரைத்து, அந்த மாட்டைத் தட்டிக் கொடுத்து, அதன் காயம்பட்ட தொடைமேல் மஞ்சள் குழைவைப் பூசியும் விட்டான். அது எரிச்சலில் இரண்டொருமுறை கத்தியது. அவனுக்கோ அப்பொழுதுதான் அவனுக்குள் அவனுக்கான ஒரு விடுதலை கிடைத்த மாதிரி இருந்தது!

ஹெஷங்காபாத்!

நர்மதை நதி பாயும் தீரம்... ஆதிசங்கரர் தன் குருவைச் சந்தித்த நதிக்கரை... மற்ற நதிகளில் நீராடினால்தான் புண்ணியம். நர்மதையை நினைத்தாலே புண்ணியம். மற்றதெல்லாம் நதி. இது ஒன்றுதான் ரதம்... பாயச்சலிலும் வடக்கு நோக்கி திசைமாறிப் பாயும் ஒரே நதி!

சீனுவும் ராஜமும் அந்தக் காலை வேளையில் தங்கள் வாரணாசி பயணத்தின் நடுவில் ஹெஷங்காபாத்தில் இறங்கி, நர்மதா நதி தீரத்துக்கும் வந்து விட்டனர்.

"இன்னிக்கு கண்ணனுக்கு இந்த நதிக்கரைல திருவாராதனமா?'' ராஜம் கேட்டாள்.

''ஆமாம். நர்மதை ஸ்நானமும் சாதாரணம் இல்லையே...'' என்றபடி சீனு படித்துறை அருகே மூழ்கி எழத் தயாரானார்.

அங்கேயும் வந்துவிட்டார் அந்த சித்த புருஷர். வந்தவர், ''காவிரில குளிச்ச கண்ணன் இங்க குளிக்கலையா?'' என்று சீனுவைப் பார்த்துக் கேட்கவும் சீனுவுக்குக் குபீரென்றது!

(தொடரும்)

12.10.2005 முதல் 18.10.2005 வரை



















**மேஷம்:** நற்பலனை அளிக்கும் வாரம். ஆடம்பர பொருட்கள் சேரும். நினைத்தது கைகூடும். வாகனம் வாங்கலாம், குடும்ப வாழ்வு ஒற்றுமையாக இருக்கும். குழந்தைகள் வழியில் மகிழ்ச்சிகரமான சம்பவங்கள் நடக்கும். திருமணம் கைகூடும். உத்தியோக உயர்வு, பண வருவாய் கிடைக்கும். நண்பர், உறவினர் மூலம் அனுகூலம் ஏற்படும். சனிக்கிழமை தோறும் ஆஞ்சநேயர் வழிபாடு செய்து வருதல் நலம்.

**ரிஷபம்:** மகிழ்ச்சிக்குரிய வாரம். நினைத்தது நடக்கும். தடைகள் விலகும். எதிரிகளால் பயம் இல்லை. கணவன் மனைவி உறவு நன்றாக இருக்கும். திருமணம் கைகூடும். வியாபாரம் சூடு பிடிக்கும். பங்கு மார்க்கெட் துறை ஏற்றம் பெறும். குரு வழிபாடு செய்து வருதல் நலம்.

**மிதுனம்:** அற்புதமான வாரம். தொட்டது எல்லாம் வெற்றி தரும். புதிய ஆடை, ஆபரணம், பொருட்கள் சேரும். பணி கிடைக்கும். சிலருக்கு உத்தியோக உயர்வு ஏற்படும். வீடு/வாகனம் வாங்க ஏற்ற நேரம். புதிய தொழில் செய்தல் நலம் தரும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். சிலருக்கு வீடு மாற்றும் ஏற்படும். ஆரோக்கியம் பாதிக்கும். வியாபாரிகள் மேன்மை பெறுவர்.

**கடகம்:** நன்மை தரும் வாரம். புதிய முயற்சி கைகூடும். பொருளாதார பாதிப்பு இருக்காது. மாணவ - மாணவிகளுக்கு நற்பயனைக் கொடுக்கும். வியாபாரிகள் நல்ல பலனை அடைவார்கள். தெய்வ அனுகூலம் ஏற்படும். தனம் பெருகும். கிரஹ மாற்றம் வரும். உத்தியோகஸ்தர்களுக்கு நல்ல பெயர் கிடைக்கும். கணவன் - மனைவி உறவு ஒற்றுமையாக இருக்கும். குரு/சனி வழிபடுதல் நலம்.

**சிம்மம்:** எதிலும் நிதானம் தேவை. வாக்குவாதம் தவிர்க்கவும். எதிலும் தாமதம் ஏற்படும். உத்தியோக நெருக்கடிகள் இருக்கும். அவசரப்பட்டு வேலை மாற வேண்டாம். நண்பர், உறவினர் மூலம் கருத்து வேற்றுமை வரலாம். மாணவ - மாணவியர் பிரயாணம் செய்யும்பொழுது பார்த்து செல்லவும். வியாபாரிகளுக்குத் தொழில் மந்த நிலை தொடரும். ராகு/கேது/சனி/ குருவை வழிபட்டு வருதல் நலம்.

**கன்னி:** மேன்மையான வாரம். ஆடை ஆபரணப் பொருள்கள் சேரும். வீடு வாசல் வாங்க ஏற்ற காலம். உத்தியோகஸ்தர்களுக்கு வெளிநாட்டு அழைப்பு கிட்டும். குடும்ப உறவு நன்றாக இருக்கும். திருமணம் கைகூடும். வியாபாரிகளுக்கு நல்ல வருவாய் கிடைக்கும். வழக்குகள் வெற்றியை அளிக்கும். பொருளாதாரம் ஏற்றம் பெறும். மனதில் தெளிவு ஏற்படும். ராகு/கேது வழிபடுதல் நலம்.

**துலாம்:** மிக அற்புதமான வாரம். தன வருவாய் ஓங்கும். மனக் குழப்பம் தீரும். புண்ணிய ஸ்தலம் செல்வீர்கள். திருமணம் கைகூடும். மகப்பேறு கிட்டும். தொழிலில் நல்ல முன்னேற்றம் கிட்டும். உத்தியோக உயர்வு ஏற்படும். கணவன் - மனைவி உறவு நன்றாக இருக்கும். வழக்குகள் வெற்றிப் பாதையில் செல்லும். சனி/குரு

# நடக்குமென்பார்; நடக்கும்!



வழிபாடு உத்தேசம்.

**விருச்சிகம்:** தீமையைப் போக்கி நன்மையை அளிக்கும் வாரம். உத்தியோக உயர்வு ஏற்படும். புதிய தொழில் துவங்க ஏற்ற காலம். திருமணம் கைகூடும். ஆடை, ஆபரணப் பொருட்கள் சேரும். மாணவ - மாணவிகள் நற்பலனை அடைவார்கள். கலைஞர்கள் ஏற்றம் பெறுவார்கள். மனக் குழப்பம் போகும். பணப் பற்றாக் குறை இருக்காது. குரு/ராசி/ கேது வழிபடுதல் நலம்.

**தனுசு:** மகிழ்ச்சிகரமான வாரம். வீடு/ வாகனம் வாங்கலாம். திருமணம் கைகூடும். சுபகாரியம் நடக்கும். வேலையில் இருந்து வந்த நெருக்கடிகள் குறைந்து, பதவி உயர்வு கிடைக்கும். வியா

பாரிகளுக்குத் தொழில் அபிவிருத்தி ஏற்படும். புதிய தொழில் துவங்கலாம். வழக்கு வெற்றி அளிக்கும். ராகு/கேது/ சனி வழிபடுதல் நலம்.

**மகரம்:** தொட்டது துலங்கும். நினைத்தது நடக்கும். வழக்கு வெற்றி அளிக்கும். உத்தியோக உயர்வு ஏற்படும். ஆடை, ஆபரணப் பொருள்கள் சேரும். மாணவ - மாணவிகளுக்கு படிப்பில் நற்பலன் கிட்டும். திருமணம் ஆகாதவர்களுக்குத் திருமணம் நடக்கும். கொடுக்கல், வாங்கல் நன்றாக இருக்கும். குரு / சனி வழிபடுதல் நலம்.

**கும்பம்:** சிறப்பான வாரம். நீண்ட தூரப் பிரயாணங்கள் ஏற்படும். உத்தியோகஸ்தர்களுக்கு நல்ல பெயர் கிடைக்கும். புதிய வீடு/ நிலம் வாங்கலாம். வாக்குவாதம் வேண்



# பதில்கள்

**என் மகனுக்குத் திருமணம் தட்டிக்கொண்டே போகிறது. எப்போது நடக்கும்? வேலை மாற்றம் ஏதேனும் உண்டா?**

**- விஜயலட்சுமி, மதுரை**

உங்கள் மகனுக்கு ராகு தசை நடைபெற்று வருகிறது. 31 வயதில் திருமணம் கை கூடும். உறவில் அமையாது. வெளிநாட்டு நிறுவனத்தில் வேலை கிடைக்கும்.

**என் மகள், மருமகனுக்கு குழந்தை பாக்கியம் உண்டா? எத்தனை குழந்தைகள்?**

**- டி.கே. சுப்ரமணியம், பெங்களூர்**

உங்கள் மகளுக்கு 2006ல் ஆண் குழந்தை பிறக்கும். ஒரு ஆண், ஒரு பெண் குழந்தை உண்டு. உங்கள் மருமகனின் தொழிலில் இனிமேல் குழப்பங்கள் இருக்காது. பணி மேன்மை பெறும். பரிகாரம் தேவையில்லை.

**என் கணவரின் தொழிலில் முன்னேற்றம் உண்டா? என் மகனின் எதிர்காலம் எப்படியிருக்கும்?**

**- ஜெயலெஷ்மி, கடலூர்**

உங்கள் கணவருடையது, தொழில் செய்ய ஏற்ற ஜாதகம் அல்ல. உத்தியோகத்துக்குச் செல்வநு லச் சிறந்தது. உங்கள் மகனுக்கு சுக்ர தசை நடைபெற்று வருகிறது. படிப்பில் அதிக கவனம் செலுத்தவும். _5 வயதுக்கு மேல் நல்ல முன்னேற்றம் கிட்டும்.

**என் மைத்துனர் மகளுக்கு கடந்த 2 வருடங்களாக வரன் தேடி வருகிறோம். ஜாதகப் பொருத்தமிருந்தும் கைகூடி வரவில்லை. எப்போது அவளுக்குத் திருமணம் நடக்கும்?**

**- நாகராஜன், மும்பை**

உங்கள் மைத்துனர் மகளுக்கு 26 வயதில் திருமணம் நடக்கும். பிறந்த ஊருக்கு வடக்கு/மேற்கு திசையில், உறவு இல்லாத இடத்தில் திருமணம் நிச்சயமாகும்.

**என் மகளுக்கு வயது 26. எப்போது திருமணம் நடக்கும்? நல்ல வரன் அமையுமா?**

**- ராஜி ஸ்ரீராமுலு, சென்னை - 55**

உங்கள் பெண்ணுக்கு சென்னையில் பிறந்த பையன் அமைவான். 2006ல் திருமணம் நடக்கும் (27 வயதுக்குள்.) நல்ல படித்த, வசதியுள்ள இடத்தில் நிச்சயமாகும்.

டாம். கைப்பொருள்கள் மீது கவனம் தேவை. ஆடை, ஆபரணப் பொருள்கள் சேரும். வியாபாரிகளின் பொருளாதாரம் பலப்படும். புதிய தொழில் செய்யலாம். ராகு/கேது வழிபடுதல் நலம்.

**மீனம்:** உடல் ஆரோக்கியம் பாதிக்கும். புதிய முயற்சி கைகூடும். வழக்கு வெற்றி அளிக்கும். உறவினர்களால் ஆதாயம் கிட்டும். புதிய தொழில் செய்யலாம். கணவன் - மனைவி விட்டுக் கொடுத்துப் போவது நல்லது. குழந்தைகள் அனுகூலம் ஏற்படும். திருமணம் கைகூடும். நீண்டநாள் முடிவு பெறாமல் இருந்த காரியம் வெற்றி அளிக்கும். குரு/ராகு/கேது வழிபடுதல் நலம்.

# "சிற்பக்கலை செய்த அதிர்ஷ்டம்!"



தென்னாட்டுத் திருக்கோயில்கள் மட்டுமல்ல... வடபாரதத் திருக்கோயில்களைப் பற்றியும் நீள, அகல, உயர விவரங்களோடு துல்லியமாய்க் கட்டுரைகளில் வடித்தவர் அமரர் தொ.மு.பாஸ்கரத் தொண்டைமான்.

ரஸிகமணி டி.கே.சி.யின் 'பண்ணை'யில் வளர்ந்தவர். வருவாய்த் துறையில் சாதாரண அரசு அலுவலராக வாழ்க்கையைத் தொடங்கி, மாவட்ட ஆட்சியாளர் வரை உயர்ந்து, தமிழகம் முழுவதும் வலம் வந்தவர். அரசாங்க வேலை ஆயிற்றே! இன்று தஞ்சை; நாளை வேலூர்! என்கிற மாதிரி அவர் உலா வந்தது, கலை இலக்கியத்துக்கு வரப்பிரசாதமாக அமைந்தது.



• பாஸ்கரத் தொண்டைமான்

கல்கியில் பாஸ்கரத் தொண்டைமான் அவர்கள், 'வேங்கடம் முதல் குமரி வரை', 'வேங்கடத்துக்கு அப்பால்' ஆகிய இரு கட்டுரைத் தொடர்களிலும், நூற்றுக்கும் மேற்பட்ட திருக்கோயில்களைப் படம் பிடித்துத் தந்திருக்கிறார்.

அரசுப் பணியில் தாம் போகுமிடங்களுக்கெல்லாம் வட்டத்தொட்டி அன்பர்களையும் கரம் பற்றி அழைத்துப் போய்த் தமிழ் முழக்கம் செய்த பாஸ்கரத் தொண்டைமான், சிறந்த பேச்சாளரும்கூட. முதன்முதலாக ரஸிகமணியின் வரலாற்றை எழுதியவர் என்னும் பெருமையோடு, தம் குருநாதரின் கடிதங்களைத் தொகுத்து வெளியிட்ட பெருமையும் அவருக்கு உண்டு!

1958ஆம் ஆண்டில், தஞ்சாவூர் கலெக்டராக இருந்த பழனியப்பாவின் திருத்தொண்டால் சிற்பக்கலைக் காட்சி ஒன்று நடைபெற்றது. இதற்கு சா.கணேசனைத் துணை சேர்த்துக்கொண்டு அருமையாகச் செய்து முடித்தார தொண்டைமான்.

இந்தக் கண்காட்சியைப் பற்றி எழுதிய கட்டுரையில், அமரர் கல்கி, "சிற்பக்கலை ஆராய்ச்சியில் வெகு காலமாக ஈடுபட்டுப் பல அரிய கட்டுரைகள் வரைந்திருக்கும் ஸ்ரீபாஸ்கரத் தொண்டைமான், சில காலமாக தஞ்சை ஜில்லாவில் உத்தியோகம் பார்த்து வருவது சிற்பக்கலை செய்த அதிர்ஷ்டம் என்றே சொல்லலாகும்" என்று குறிப்பிட்டிருக்கிறார்.

காட்சிக்கு எளியவர், கனிவான இயல்பினர் தொண்டைமான். எந்தப் படாடோபமும் இல்லாத அதிகாரி! வசதிகள் சீராக இல்லாத இடங்களுக்கெல்லாம் மாட்டு வண்டியிலும், கால்நடையாகவும்கூடச் சென்று ஆலய தரிசனம் செய்து வாசகர்களுக்கு இலக்கிய தரிசனம் செய்து வைத்தவர்.

அந்த அறிஞரின் நூற்றாண்டு விழாவைக் கொண்டாடுகிறார்கள். இது ஒரு பொன்மயமான நிகழ்வு. வாழ்த்தி வணங்குவோம்.

- சுப்ர. பாலன்

விழா

**அண்மையில் நடைபெற்ற 'சந்திரமுகி' இருநூறாவது நாள் விழா மேடையில் அரங்கேறிய அட்டகாசங்கள் பல. அவற்றில் உங்களுக்காக சில...**

● பிளாக்கில் சினிமா டிக்கெட் வாங்குவது சகஜம். ஆனால் ஒரு படத்தின் வெள்ளி விழா இன்விடேஷனை பிளாக்கில் வாங்குவது கொஞ்சம் ஓவர் தான். இதிலும் சாதனைமுகியானது சந்திரமுகிதான். பிளாக் டிக்கெட் மாதிரியே நூறில் ஆரம்பித்து ஆயிரம் வரை வியாபாரம் அமோகமாய் அமர்க்களப்பட்டது.

● அவ்வப்போது எடுத்து பார்த்துக்கொள்ள வசதியாக குரு சச்சிதானந்தாவின் போட்டோவை பாக்கெட்டில் பத்திரப்படுத்திக் கொள்கிறார் ரஜினி. கூடவே புதிதாக ஷீரடி சாய்பாபாவின் போட்டோ!

● மேடையில் கால்மேல் கால் போட்டுக்கொண்டு உட்கார்ந்திருந்ததை யாரோ ஒரு ரசிகர் கமெண்ட் அடிக்க, நயன்தாரா மூட் அவுட். பேசியவர்களெல்லாம் நயன்தாராவின் அழகைப் புகழ்ந்து தள்ள, சகஜ நிலைக்கு வந்த அம்மணியின் முகத்தில் டன் கணக்கில் வெட்கம்.

● இந்த வருடத்தின் சிவாஜி விருது, டி.எம்.எஸ்க்கு. மேடையின் மத்தியில் ஸ்பெஷல் சேரில் உட்கார வைத்து பொன்னாடை போர்த்தி மரியாதை செய்ததோடு விட்டுவிட்டார்கள். பேசியவர்களில் யாரும் டி.எம்.எஸ் என்கிற பெயரைக்கூட உச்சரிக்கவில்லை.

● ஜோதிகா வரமுடியாமல் போனதன் காரணத்தை ராம்குமாரில் ஆரம்பித்து ரஜினி வரை நிறைய பேர் ரிபீட் செய்தார்கள். வழக்கமாக ரஜினி பட விழாவுக்கு வரும் கே.பி, பஞ்சு அருணாசலம், எஸ்.பி. முத்துராமன் மட்டுமல்ல... சிவாஜி குடும்பத்துக்கு நெருக்கமான கமலும் ஆப்ஸெண்ட்!

● '176 தியேட்டர்களில் நூறு நாள் என்கிற சாதனையை எட்ட ரஜினி என்கிற பிராண்ட் நேம்தான்

# மூட் அவுட் நயன்... நாட் அவுட் ரஜினி!



உதவியது' என்று சொன்ன ராம்குமார், 'தென் ஆப்ரிக்காவில் ரிலீஸாகி நூறு நாள் ஓடிய ஒரே படம் சந்திரமுகிதான்' என்றார். ஏற்கெனவே மீடியாவில் அலசி ஆராய்ந்து கசக்கிப் போட்ட புள்ளி விவரங்களையே மேடையில் எல்லோரும் சொல்லிக் கொண்டிருந்தார்கள். உதாரணத்துக்கு 'தேவுடா' பாட்டில் மூன்றாவது ரிபீட் செய்தவர் யார் என்கிற மினி க்விஸ்ஸை முப்பது தடவையாவது மேடையில் நடத்தியிருப்பார்கள்!

● விழாவுக்கு லேட் கம்மர் டைரக்டர் ஷங்கர்தான். அழைப்பிதழ் கிடைப்பதில் தாமதம் என்று கேள்விப்பட்டதும் பதறிப் போன ராம்குமார், உதவியாளர்களை வாசலிலேயே நிறுத்தி வரவேற்கச் சொல்லிவிட்டார். 'சிவாஜி'யோட டைரக்டர்னா சும்மாவா?

● சந்திரமுகி பட ட்ரைலரில் தெலுங்கில் மாட்லாடிய விஷயத்தையே ஆங்கிலத்தில் பேசினார் மத்திய அமைச்சர் தாசரி நாராயணராவ். சிவாஜி போலவே ரஜினியும் தமிழ் சினிமாவின் ட்ரெண்ட் செண்டர் என்பதை அழுத்திச் சொன்ன தாசரி, ரஜினிக்கும்





தனக்கும் முப்பது வருஷத்து நட்பு இருப்பதாகப் பெருமைப்பட்டுக் கொண்டார். தாசரி சொன்ன பிட் நியூஸ்: அபூர்வ ராகங்களின் தெலுங்குப் பதிப்பில் ரஜினிதான் நடிப்பதாக இருந்ததாம். ஆனால், தாசரிதான் பிடிவாதமாக ஒரு புதுப் பையனை அந்தச் சின்ன ரோலுக்கு ஒப்பந்தம் செய்தாராம். அந்த புதுப் பையன்தான் பின்னாளில் ரஜினி போலவே வில்லனாக நடித்து, படிப்படியாக ஹீரோ ப்ரமோஷன் வாங்கிய மோகன்பாபு!

● விழாவில் கலந்துகொள்ள பெங்களூரிலிருந்து வந்திருந்த ரஜினியின் பழைய நண்பர்கள் முதல் வரிசையில் ஆஜர். மூன்று முடிச்சில் தெரிந்த அதே ஃபையர், வேட்டையன் வரை இருக்கிறது என்ற ஷங்கரின் பேச்சுக்கு நண்பர்கள் மத்தியில் படு ரெஸ்பான்ஸ். 'கமலை வைத்து இயக்கிவிட்டு ரஜினியை வைத்து இயக்காவிட்டால் எந்தவொரு டைரக்டரின் சினிமா கேரியரும் கம்ப்ளீட் ஆகாது' என்று சொல்லி கைத்தட்டலை அள்ளிக் கொண்ட ஷங்கர், சிவாஜி படம் பற்றி சின்ன டிரைலர் காட்டிவிட்டுத்தான் போனார்.

● கேசட் ரிலீஸ் விழாவின்போது ரஜினி சொல்லியிருந்த யானை - குதிரை மேட்டரை திரும்பவும் திரையில் காட்டி, ரிபீட் செய்திருந்ததால் எதிர்பார்ப்பு எகிறிவிட்டிருந்தது. சீரியஸாக உட்கார்ந்திருந்த கூட்டத்தை ரிலாக்ஸ் செய்த ரஜினியும் நிறைய விஷயங்களை ரிபீட் செய்தார். தான் குதிரை போல எழுந்து நிற்கக் காரணமான 'பாபா' புகழ் சச்சிதானந்தாவுக்கும் அப்படி எழுந்து நின்றதோடு, தொடர்ந்து ஓடி நாட் அவுட்டுக்குக் காரணமாக இருந்த ரசிகர்களுக்கும் ரஜினி நன்றி சொன்னபோது கரகோஷத்தால் அரங்கு அதிர்ந்தது. 'பாபா' சறுக்கிய நேரத்தில் வந்த விமர்சனங்கள் பற்றிக் குறைபட்டுக் கொண்ட ரஜினி அரசியல் பற்றி கடைசி வரை வாய் திறக்கவே இல்லை.

● 'இன்னாபா... தலைவரு ஏதாவது புதுசா சொல்வாருன்னு வந்தா... கவுத்துட்டாரே'. சந்திரமுகி டயலாக் மாதிரியே ரஜினியின் பேச்சும் பன்ச் இல்லாமல் ரிபீட் ஆனதால், நொந்து நூடுல்ஸான ரசிகர் கூட்டமும் உற்சாகம் தொலைத்து அபீட் ஆனது.

- ஜெ. ராம்கி

# கன்னிமரா கலியபெருமாள்

முன்ன மாதிரியெல்லாம் அவ்ளோ ஈஸியா கன்னிமரா (பேரு என்னமோ 'கன்னிமாரா'தான். ஆனா எல்லாரும் கூப்பிடறது 'கன்னிமரா'ன்னுதான்) லைப்ரரிக்குள்ள நுழைய முடியறதில்லப்பு... அதுவும் சோடியா வந்தா வாசல்ல வச்சே செக்யூரிட்டிங்க விசாரிச்சுட்டுதான் உள்ள அனுப்பறாங்க. நாமதான் சிங்கிளாச்சே... ஈஸியா உள்ளே போயிட்டோம்.

நுழைஞ்சு ஒரு லுக் விட்ட பிறகுதான் தெரிஞ்சது, ஊர்ல இருக்குற பெரும்



பாலான சோம்பேறிங்க, உண்மையிலேயே படிப்புக்காகவும் ஆராய்ச்சிக்காகவும் வர்றவங்களுக்கு இடைஞ்சல் தர்ற மாதிரி எடத்தை அடைச்சுக்கிட்டு உட்காந்து இருக்குறது. நான் பார்த்துக்கிட்டு இருக்கறப்பவே, ஒருத்தரு நேரா கையை வீசிக்கிட்டு லைப்ரரிக்குள்ள என்ட்டர் ஆனாரு.

எங்க ஃபேன் இருக்குன்னு கண்ணை சுழட்டிக்கிட்டே போனவரு, சொகமா காத்து வீசுற இடமா பாத்து உட்காந்தாரு. அப்படியே கொஞ்ச நேரம் மேஜைல இருந்த ரெண்டு மூணு புக்கை புரட்டிட்டு, சுத்தும் முத்தும் பார்த்துட்டுத் தலையை கவிழ்ந்தவரு... திரும்ப எழுந்திருக்கவே இல்லப்பு... கிட்ட போயி பார்த்தா மெல்லிய குறட்டை சத்தம்! அவரு பக்கத்துல இருந்தவங்க குறட்டையால டென்ஷனாகி இடத்தை காலி பண்ணிட்டாங்க.

எதிர் பெஞ்சுல இருந்தவர்கிட்ட விசாரிச்சா, "இவரு பேரு கலியபெருமாளுங்க. ரெகுலர் கஸ்டமரு. அதனால வாசல்ல இருக்குற ரெஜிஸ்டர்ல கூட கையெழுத்து போடமாட்டாரு. கையிலயே லன்ச் எடுத்துட்டு வந்துடுவாரு. சென்ட்ரல் கவர்ன்மென்ட் ஜாப்ல வி.ஆர்.எஸ். வாங்கிட்டு, இப்படி பொறுப்பில்லாம சுத்திக்கிட்டுத் திரியறாரு''ன்னு நீட்டிக்கிட்டே போக, 'போதுஞ் சாமி'ன்னு கையெடுத்துக் கும்பிட்டுட்டு வெளில வந்தேன். இந்த மாதிரி கலிய பெருமாளுங்க ஏகப்பட்ட பேரு கன்னிமராவுக்கு ரெகுலர் அட்டெண்டென்ஸ் கொடுக்குறாங்க.



# பராக்...பராக்..!



## விசிட்

“மியூசியத்துக்குள்ள ஜோடிகளை சுலபமா அனுமதிக்கறதில்ல. அதுக்காக அவங்க அலட்டிக்கறதுமில்ல. தனித் தனியா வெவ்வேறு நேரத்துல டிக்கெட் எடுத்துட்டு உள்ளே போயி ஒண்ணா உட்காந்து பேச ஆரம்பிச்சுடுவாங்க. கேட்டா, ‘நாங்க ஒண்ணும் சும்மா வரல. காசு கொடுத்து டிக்கெட் வாங்கியாச்சு’ன்னு நம்மள அலட்சியப்படுத்துவாங்க”ன்னு சொல்லிபுட்டு ரவுண்ட்ஸுக்குக் கிளம்பினாரு செக்யூரிட்டி ஒருத்தரு.

கொஞ்ச தூரத்துல ஒரு காலேஜ் படிக்கற தம்பி படிக்கட்டுல உட்கார்ந்துக்கிட்டு எதையோ படிச்சிக்கிட்டு இருந்துச்சு. திடீர்னு பாக்கெட்ல கையை விட்டு, எதையோ எடுத்து உள்ளங்கைல வச்சி தேய்ச்சி, நாக்குக்கு அடியில வச்சுக்கிட்டு, திரும்பப் ‘படிப்புல’ பிஸியாயிடிச்சி. அது என்ன புக்குன்னு நான் தனியா சொல்லணுமாக்கும்! இதுக்குத்தான் இந்த இடத்தை இவ்ளோ சூப்பரா தயார் பண்ணி வச்சிருக்காங்களான்னு நினைச்சுக்கிட்டே கிளம்பறேன்... திடீர்னு சத்தம்! செக்யூரிட்டிக்கும், அந்த காலேஜ் தம்பிக்கும் வாய்த் தகராறு. ஒருவழியா அந்தத் தம்பியை வெளில தள்ளிட்டுத்தான் மறு வேலை பார்த்தாங்க செக்யூரிட்டிங்க.

இதே கேம்பஸ்ல ‘நிரந்தர புத்தகக் கண்காட்சி’ ஒண்ணு படா சோக்காவே நடக்குது. எல்லா பதிப்பகத்து புக்கும் கிடைக்குது. தள்ளுபடி வேற தர்றாங்க. ஒண்ணே ஒண்ணு... இங்க ஒவி பார்ட்டிங்க ரொம்ப நேரம் கடலை போட முடியாது. சட்டு புட்டுன்னு பார்த்துட்டு, வேணும்ங்கற புக்கை வாங்கிட்டு ஜூட் விட வேண்டியதுதான். அதனாலதானோ என்னமோ, இங்க பெருசா கூட்டமே இல்ல!





- ஒற்றன்

படங்கள் : ஸ்ரீஹரி

# போட்டுத் தாக்கு!



நடிகை ராதிகாவிடம் கேட்கக் கூடாத பத்துக் கேள்விகள்

**1** உங்ககிட்ட முறுக்கிக்கிட்டு மேற்கே போன ரயிலுகிட்ட இப்ப பழம் விட்டாச்சா?

**2** ஹேரண்ட்சம் ஆளு ஒருத்தர்... வயசு இருபதுக்குள்ளதான் இருக்கும். உங்களுக்கு ஜோடியா ஏதாவது சீரியல்ல நடிக்க வாய்ப்பு தர முடியுமா?

**3** சித்தப்பா எம்.பியாகி அழகு பார்த்தாச்சு... சித்தி எப்ப எம்.எல்.ஏவாகி நடைபழகப் போறீங்க?

**4** தமிழகத்தோட தலைப்புச் செய்தியாகற மாதிரி நீங்க எப்ப பேட்டி தர்றதா உத்தேசம்?

**5** அட்லீஸ்ட், குஷ்புவோட 'ஜாக்பாட்'ல கலந்துக்கற ஐடியாவாவது உண்டா?

**6** 'செல்வி' மேடமுக்கு பிடிச்ச சீரியல் 'கணவருக்காக'தானே?

**7** பத்து மணிக்கு உங்க நாடகம் முடிஞ்சதும் அணைச்சுட்டு, திரும்ப பத்தரைக்குத்தான் டீ.வியை போடுவீங்களாமே?

**8** 'தலைமகன்' ஷூட்டிங்ல நயன்தாராவை விட்டு அங்க இங்க நகரமாட்டேங்கறீங்களாமே... உபயம் சிம்புவா?

**9** எப்பவுமே உங்க சீரியலுக்கு இன்னொரு டைரக்டர் தயாரா இருப்பாங்களோ?

**10** உங்க அண்ணனுக்கு 'அம்மா' பாசம். உங்களுக்கு?

பரமு



# அஞ்சு ரூபாய் அதட்டல்!

விஜயா ரவி

"அப்பா! டிபன் ரெடி! சாப்பிட வர்றீங்களா?" பவானி குரல் கொடுக்க, "இதோ வந்துட்டேன்" என்றபடி கையலம்பிக் கொண்டு, தட்டின் முன் அமர்ந்தார் ராஜேந்திரன்.

வாசலில் அழைப்புமணி ஒலித்தது.

"யாரது காலங்கார்த்தால?"

"சோப்பு விக்கறேன், சீப்பு விக்கறேன்னுட்டு யாராவது வந்திருப்பாங்கப்பா. ஏய் சந்தியா! போய் யாருன்னு பாரு" தங்கையை விரட்டினாள் பவானி.

பாடப் புத்தகங்களை பையில் அடுக்கிக் கொண்டிருந்த சந்தியா, எழுந்து போய் கதவைத் திறந்தாள்.

இரண்டு பெண்கள் நின்றிருந்தனர். நீலப்புடைவை அணிந்த இளம் பெண், கைகளில் ஒரு சிறிய தட்டை ஏந்தியிருந்தாள். அதில் அம்மன் படம் ஒன்றும், பத்து ரூபாய் நோட்டுகளாக நான்கைந்தும் இருந்தன. அவள் முகத்தில் சோகம் அப்பிக்கிடந்தது. அருகில் நின்றிருந்த நடுத்தர வயது சிவப்பு புடைவைக்காரி, "இந்தப் பொண்ணுக்குக் கல்யாணம் வச்சிருக்கோம். தயவுசெஞ்சு பண உதவி செய்யணும்" என்றாள்.

உள்ளே வந்த சந்தியா, "அப்பா! யாரோ ஒரு அக்காவுக்குக் கல்யாணமாம். பணம் கேட்கறாங்க" என்றாள்.

"இதெல்லாம் ஏமாத்து வேலை! இல்லைன்னு சொல்லியனுப்பு, போ" என்றார் எரிச்சலாக.

"பணம் இல்லை. நீங்க போயிட்டு வாங்க..." என்றபடி கதவைச் சாத்த முயன்றாள் சந்தியா.

"உங்களால முடிஞ்ச சில்லறையாவது கொடுங்கம்மா..." சிவப்பு புடைவைக்காரி கெஞ்ச, நீலப்புடைவை பெண், கண்கள் கலங்க தலையைக் குனிந்து கொண்டாள்.

மறுபடி உள்ளே வந்த சந்தியா, தன் ஜியாமெட்ரி பாக்ஸைத் திறந்து அதிலிருந்து ஐந்து ரூபாய் நாணயத்தை எடுத்து அவள் தட்டில் போட்டு விட்டு வந்தாள்.

"ஏய் சந்தியா! நான் வேணாம்னு சொல்லியும் எதுக்கு பணம் குடுத்த?" என்றார் அப்பா கோபமாக.

"அஞ்சு ரூபாதாம்பா குடுத்தேன்."

"ஓஹோ! அஞ்சு ரூபா உனக்கு லேசாப் போயிடுச்சா? என் ஒரு நாள் பஸ் செலவுக்கு ஆகுமில்லை? ஆனாலும் திமிரு உனக்கு!"

"இல்லப்பா, மாப்பிள்ளை வீட்டுக்காரங்க கேக்குற சீர்வரிசையைச் செய்ய உங்ககிட்ட நிறைய பணம் இல்லாததால தானே பவானி அக்காவுக்கு இருபத்தேழு வயசாகியும் இன்னும் கல்யாணம் ஆகாம இருக்கு... யாரோ ஒரு அக்காவுக்காவது கல்யாணம் ஆகட்டுமேன்னுதான் காசு குடுத்தேன்" என்று கண்கள் பனிக்க சந்தியா சொல்ல, விக்கித்து நின்றார் ராஜேந்திரன். ●

"கிராமப்புறங்களில் இருக்கும் கைவினைக் கலைஞர்களின் வாழ்க்கை மிகவும் பரிதாபத்துக் குரியதாக இருக்கிறது. அவர்கள் படிக்காதவர்கள். பாரம்பரிய கைவினைக் கலையைத் தவிர வேறு ஒன்றும் தெரியாது. ஆனால், அவர்கள் தயாரிக்கும் கைவினைப் பொருட்களை அவர்களால் விற்க



# சிவப்பு நாடாவால்



முடியவில்லை. சோற்றுக்கே வழியில்லாமல் அவர்கள் திண்டாடிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களின் அடுத்த தலைமுறையினர் படிக்கப் போய் விட்டதால், அவர்களுக்குப் பாரம்பரிய கைவினைப் பொருட்கள் செய்யும் நுணுக்கங்களைக் கற்றுக்கொள்ள ஆர்வமில்லை. இதே நிலை நீடித்தால், இந்தத் தலைமுறை கலைஞர்களுடன் கலையும் மறைந்து விடும்" என்று ஆதங்கப்படுகிறார் எல்.ராதாகிருஷ்ணன். தேசிய விருது பெற்ற கைவினைக் கலைஞர் இவர். தமிழ்நாடு கைவினைக் கலைஞர்கள் நலச் சங்கத்தின் செயலாளராகவும் இருக்கிறார்.

"கிராமப்புறங்களில்தான் கைவினைக் கலைஞர்களில் பெரும்பாலானவர்கள் வசிக்கிறார்கள். அங்கேதான் கைவினைப் பொருட்களும் உருவாக்கப்படுகின்றன. ஆனால், அவைகளை வாங்கும் மக்கள் வசிப்பது நகர்ப்புறங்களில்தான். கைவினைக் கலைஞர்களால், நேரிடையாக நகர்ப்புறங்களுக்கு வந்து தங்களது பொருட்களை விற்பனை செய்வது என்பது சாத்தியமில்லை.

முன்பெல்லாம், அரசாங்கத்தின் கைவினைக் கலை மேம்பாட்டுத் துறை, கைவினைக் கலைஞர்களிடமிருந்து கலைப் பொருட்களை நேரடியாக வாங்கி, பூம்புகார் முதலிய ஷோரூம்களில் வைத்து விற்பனை செய்து, கலைஞர்களை ஆதரித்து வந்தது.



* ராதாகிருஷ்ணன்



# சிதைகிறார்கள்!

இதனால், தமிழகம் முழுவதிலும் உள்ள ஏராளமான கலைஞர்கள் பயன்பெற்று வந்தனர். ஆனால், அரசாங்கம் இந்த நடைமுறையை மாற்றிவிட்டது. இப்போது 'கன்சைன்மெண்ட்' அடிப்படையில், கலைஞர்களிடமிருந்து கலைப் பொருட்கள் பெறப் பட்டு, ஷோரூம்களில் வைக்கப்படுகின்றன. அந்தப் பொருட்கள் விற்பனையான பின், அரசாங்கம் தனக்குரிய கமிஷனை எடுத்துக்கொண்டு, மீதியை கலைஞர்களுக்கு அனுப்பி வைக்கிறது.

எனவே, தாங்கள் அனுப்பும் கலைப் பொருட்கள் எப்போது விற்பனையாகும், அதற்கான பணம் எப்போது வரும் என்று தெரியாத நிச்சயமற்ற தன்மை நிலவுகிறது.

நடைமுறையில் பார்த்தால், கலைப் பொருட்கள் விற்றாலும்கூட அரசாங்க சிவப்புநாடா காரணமாக, கலைஞர்களின் கைக்குப் பணம் வந்து சேருவது மிகவும் தாமதமாகிறது. இதனால், மிகவும் பாதிக்கப்படுவது அப்பாவிக் கலைஞர்கள்தான்'' என்கிறார் ராதாகிருஷ்ணன்.

பாதிக்கப்பட்ட கலைஞர்கள் ஒன்று சேர்ந்து 'தமிழ்நாடு கைவினைக் கலைஞர்கள் நல்வாழ்வு சங்கம்' என்ற அமைப்பை ஏற்படுத்தி இருக்கிறார்கள். இவர்கள் சென்னையில் 'சிருஷ்டி' என்ற ஷோரூமை நிறுவியுள்ளனர். தவிர டெல்லி, பூனா, மும்பை, ஹைதராபாத், பெங்களூர் என்று நாட்டின் பல்வேறு முக்கிய நகரங்களிலும் கைவினைப் பொருட்கள் கண்காட்சிகளை நடத்துகிறார்கள். இவைகளில் தமிழகம் மட்டுமின்றி அகில இந்திய அளவில் பல்வேறு மாநிலங்களிலிருந்தும் கைவினைக் கலைஞர்கள் கலந்து கொள்கிறார்கள்.

"இவற்றுக்கு பொதுமக்கள் மத்தியில் நல்ல வரவேற்பு இருக்கிறது. தமிழ்நாட்டில் அனைத்து முக்கிய நகரங்களிலும் கண்காட்சி நடத்துவதற்கான ஏற்பாடுகளைச் செய்து கொண்டிருக்கிறோம். மக்களின் ஆதரவு கிடைக்குமென்று நம்புகிறோம்'' என்கிறார் ராதாகிருஷ்ணன்.

- சந்திரமௌலி

படங்கள் : ஸ்ரீராம் செல்வராஜ்

# எனக்கு பிடிக்காது!

**ச**ன் மியூசிக் வி.ஜே. ஹேமா சின்ஹாவை எல்லோருக்கும் பிடிக்கும். ஆனால் அவருக்குப் பிடிக்காத விஷயங்கள் என்னென்ன தெரியுமா?

**ரிங்டோன்**

'ஹார்டிகார்டி'னு ஒரு ரிங்டோன் இருக்கு. அந்த ரிங்டோனைக் கேட்டாலே எனக்கு அப்படியொரு தலைவலி வந்துடும்.

**ஹீரோ**

குண்டா இருக்குற அஜீத். இப்போ இளைச்சுட்டதா சொல்றாங்க. ஆனாலும் பழைய க்யூட்னஸ் இப்போ இல்ல.

**டிரஸ்**

ஜீன்ஸ் - டீஷர்ட் போடறது எங்க வீட்ல பிடிக்காது. அதனால எனக்கும் பிடிக்காது.

**நல்ல பழக்கம்**

டயட்ல இருக்கறது ரொம்ப நல்ல பழக்கம். ஆனா, அப்படி ஒரு வார்த்தையையே டிக்ஷனரில இருந்து எடுக்கணும்னு நினைக்கறவ நான்.

**விளையாட்டு**

கிரிக்கெட்தான். ஏன்னா மேட்ச் இருக்கற சமயத்துல என் வீட்ல என்னைத் தவிர, எல்லாருமே கிரிக்கெட்ல மூழ்கி, என்னைக் கண்டுக்கவே மாட்டாங்க.

**பதில்**

ப்ரோக்ராம்ல நான் கேள்வி கேட்டவுடனே பதில் சொன்னா எனக்குப் பிடிக்காது. நான் தர்ற க்ளூவை வைச்சு பதில் சொன்னாத்தான் பிடிக்கும்.

**டிஷ்**

எங்கம்மா செய்யற பச்சை மிளகாய் சட்னியைப் பார்த்தாலே மூட் அவுட் ஆயிடும்.

- கலை

படம் : ஸ்ரீஹரி



# விளம்பரம்... நிலவரம்... கலவரம்!



சென்னைக்கு மாதமொருமுறை மும்பை நட்சத்திரங்களும் மேதகு(!) மாடல்களும் வந்து செல்கின்றனர். சென்ற மாதம் ஷாருக்கான் (கோல்ஃப் வாட்ச்)... இந்த மாதம் லாரா தத்தா (பேன்டீன் ஷாம்பூ)...

தங்கள் ப்ராடக்டை தூக்கி நிறுத்த ப்ரொபஷனல் மாடல்களைவிட பளபளக்கும் சினிமா ஸ்டார்களையே அதிகம் நம்புகின்றன பன்னாட்டு நிறுவனங்கள். கிரிக்கெட் வீரர்களைக் கூட ஒரு சில நிறுவனங்கள் கழற்றிவிட்டிருக்கின்றன.

ஓரிரு நாட்கள் படப்பிடிப்புக்கு லட்சங்களை... ஏன், கோடிகளைக்கூட அள்ளித் தருவதால் விளம்பரங்களை நட்சத்திரங்களும் மறுப்பதில்லை. விளம்பரங்களின் பக்கமே தலை வைத்துப் படுக்கமாட்டோம் என்று கூறி வந்த நம்மூர் ஸ்டார்களான அஜீத், விக்ரம்கூட இன்று சின்னத்திரைக்குள் நுழைந்து கேன்வாஸ் செய்கிறார்கள்.

ஏன் நடிகர், நடிகைகளிடம் மட்டும் இப்படி விழுகின்றனர்?

"வெளிநாட்ல பண்ற மாதிரி நம்ம ஊர்ல என்னதான் கிரியேட்டிவா பண்ணாலும் அது ப்ராடக்டோட சேல்ஸை உயர்த்தவே உயர்த்தாது. சும்மா கான்செப்டை ரசிச்சுட்டுப் போயிடுவாங்க. ஆனா சினிமா நட்சத்திரங்களைப் போட்டா, அதுக்கு மவுசே தனி. 'அட, இங்கே என்ன பண்றாங்க'ன்னு ஆடியன்ஸ் கவனிக்கும்போது, நம்ம ப்ராடக்ட் ஈஸியா மனசுல பதியுது. இதுவரைக்கும் சினிமா நட்சத்திரங்களை வச்சு எடுத்த எதுவும் சோடை போனதில்லை" என்கிறார் விளம்பர நிர்வாகி ஒருவர்.

விளம்பரங்களும் ஒரு வகையில் ஸ்டார்களுக்கு நல்ல விளம்பரம்தான்! படங்கள் ஓடுகின்றனவோ இல்லையோ, 'விளம்பரங்களுக்கு உன்னை அழைக்கவில்லை என்றால், உன் மார்க்கெட் காலி' என்கிற நிலவரம்தான் இங்கு நிலவுகிறது.

என்ன, கேட்கக் கலவரமாய் இல்லை!

- சநகன்

படம் : ஸ்ரீஹரி

# இளமை கல்கி

# ஐஐ!

'ஐஐ'– இதுதான் பெயர். இந்த சிம்பன்ஸி தங்கியிருப்பது சீனாவிலுள்ள ஷான்க்சி மிருகக் காட்சி சாலையில். பெயர் சற்று விநோதமாக இருந்தாலும் மிகவும் அழகானவள். வயது 26. மாநிறம். குட்டிக் குட்டி டாலடிக்கும் கண்கள். இந்த ஐஐக்கு ஒரே ஒரு கெட்ட பழக்கம். நாளொன்றுக்குக் குறைந்தது பத்து முறையாவது ஊதித் தள்ளினால்தான் 'கூலாக' இருக்க முடிகிறதாம். புகை பிடிப்பது உடல் நலத்துக்குத் தீங்கானது என்று சீனாவில் பொம்மை பொம்மையாக எழுதி வைத்திருந்தாலும் ஐஐக்கு அது தெரியப்போவதில்லை என்பதால், தைரியமாக ஊதித் தள்ளிக் கொண்டிருக்கிறது.

இந்தப் பழக்கம் எப்படி ஏற்பட்டது? காதலித்ததால்! 'ஜியான் ஜியான்' என்று இவருக்கு ஒரு பாய் ஃப்ரெண்ட் இருந்திருக்கிறார். யார் முதலில் 'ஐ லவ் யூ' சொன்னார்கள் என்று தெரியவில்லை. ஆனால், இருவரும் மரத்தைச் சுற்றிச் சுற்றி காதலிக்கத் தொடங்கியிருக்கிறார்கள். பிறகு ஒரு நாள் திடீரென்று 'ஜியான் ஜியான்' காணாமல் போய்விட்டார். (வேறு ஒரு ஐஐயைத் தேடிப் போய்விட்டாரா என்று தெரியவில்லை.)

மனம் தளராத ஐஐ, மற்றொரு பாய் ஃப்ரெண்டைத் தேடிப் பிடித்திருக்கிறார். ஆனால், டாஹூவும் (பாய் ஃப்ரெண்ட் பேர் சாமி) இவரை விட்டுப் பிரிந்து விட, வெறுப்படைந்த ஐஐ சிறிது சிறிதாக சிகரெட் நோக்கித் திரும்பியிருக்கிறார். அதிகாரிகளும் 'பாவம் சோகமாக இருக்கிறாரே' என்று ஐஐயைக் கண்டிக்காமல் விட்டுவிட்டார்கள்.

சமீபமாக 'ஊதல்கள்' பெருகிவிட, பயந்து போன அதிகாரிகள் 'அப்படியெல்லாம் பண்ணாதீங்க அக்கா' என்று ஐஐயிடம் முறையிட்டிருக்கிறார்கள். 'ஊஹூம்' என்று தலையை ஆட்டியிருக்கிறார் ஐஐ. யோசித்துப் பார்த்த அதிகாரிகள், அவர் மனதை மாற்ற ஒரு வாக்மேனை வாங்கி அவர் காதில் செருகியிருக்கிறார்கள். ஆச்சரியம்... ஐஐ இப்பொழுதெல்லாம் புகைப்பதேயில்லை. தலையை ஆட்டி பாட்டு கேட்டுக் கொண்டிருக்கிறார்.

- மருதன்





# சானியாவுக்கு அடுத்து?

எல்லோருக்கும் ரொம்ப ஏமாற்றம் தான். 'மேட்ச்ல தோக்கறதெல்லாம் ரொம்ப சகஜம். எப்பவும் ஜெயிச்சிக் கிட்டே இருக்க முடியாது'ன்னு கொல் கத்தா சன்-ஃபீஸ்ட் ஓப்பன்ல பிரகாசிக் காத சானியாவே நமக்கு ஆறுதல் சொல்ல வேண்டியதாப் போச்சு! ஆமா, நம்பர் 37 சானியாவுக்கு அடுத்து யாரு இந்தியா சார்பில் டென்னிஸ் தர வரிசைப் பட்டிய லில் இருக்கா? 'நான்தாங்கோ!' என தன் டென்னிஸ் ராக்கெட்டை உயர்த்தி, அட்டெண்டன்ஸ் கொடுக்கிறார் ஷிகா உபராய்!

முடிந்து போன சன் ஃபீஸ்ட் ஓப்பனில் சானியாவை விடச் சிறப்பாக விளையாடிய இந்திய வீராங்கனை ஷிகா! மும்பையில் உதித்த ஷிகா, தற்போது மூச்சுவிட்டுக் கொண்டிருப்பது அமெரிக்காவின் நியூ ஜெர்ஸியில்! 1999ல் டென்னிஸ் (ஒற்றை யர்) தரவரிசைப் பட்டியலில் 912வது இடத்தில் இருந்த ஷிகா, 2005 ஆகஸ்ட் டில் 122வது இடத்துக்கு முன்னேறியுள்ளார். (சன் ஃபீஸ்ட்டுக்குப் பின் 139வது இடம்).

ஷிகாவுக்கு ஆறு வயதி லேயே டென்னிஸ் ஜுரத்தை ஏற்படுத்திய அவரது தந்தை மகேஷும் டென்னிஸ் வீரர்தான். 'கடவுள் டென்னிஸ் விளையாண்டால் ரோஜரைப் போல்தான் விளையாடுவார்!' என்று ஷிகா சொல்லுமளவிற்கு, அவரைக் கவர்ந்த டென்னிஸ் மன்மதன் ரோஜர் பெடரர்!

'என்னோட முதல் கனவு டென் னிஸ்ல நம்பர் 1 வீராங்கனையா மின்ன ணும்! டென்னிஸ் இல்லாத வாழ்க்கையை என்னால கனவு காணவே முடியாது. என் னோட அடுத்த கனவு ஐக்கிய நாடுகள் சபையோட பொதுச் செயலாளரா வர ணும்ங்கிறதுதான்!'' என மிகப்பெரிய கனவுகளோடு வாழும் 'கலாம்' பிராண்ட் ஷிகாவின் வயது 22. ஷிகாவுக்கு மைதானத் தில் மட்டும்தான் ஆடப் பிடிக்குமாம். டிஸ்கொதே? அட, வெட்கம் வந்துவிடு மாம். பிடித்த கலர் 'நினைவு'களின் நீலம்! எழுத்தாளர், பாட்டரைப் பெத்த ரௌலிங்! பிடித்த சப்ஜெக்ட், வரலாறு!

இவை எல்லாவற்றையும்விட சுவா ரஸ்யமான விஷயம் இதுதான், ஷிகாவின் பெரிய சகோதரி டியா, இளைய சகோதரிகள் நேஹா, நிகிதா - நிமிதா (இரட்டையர்கள்) எல் லோருமே டென்னிஸ் வீராங் கனைகள்தான். நேஹா தற்போது தரவரிசைப் பட் டியலில் 272வது இடத்தி லிருக்கிறார். வீனஸ்-செரினா வில்லியம்ஸ் மாதிரி, இந்த ஷிகா-நேஹா உபராய் சகோ தரிகளும் கலக்கணும்னு உற்சாகப்படுத்துவோம். ஓ.கேயா!

- முகில்




# நடந்தது

காட்சிகள் நாளுக்கு நாள் பரபரப்பாகவும், படு சுவாரஸ்யமாகவும் மின்னல் வேகத்தில் மாறிக் கொண்டிருக்கின்றன. சென்னை மாநகராட்சியின் துணை மேயர் கராத்தே தியாகராஜன், அ.தி.மு.கவில் ஐக்கியமான நிமிடம் தொட்டு அசுர வேகத்தில் முன்னேறி வந்தார். அண்ணா அறிவாலயப் பூங்கா இருக்குமிடம் மாநகராட்சிக்குச் சொந்தமானது என்று கூறி தி.மு.க தலைமையின் பி.பியை எகிற வைத்ததைத் தொடர்ந்து, பக்கா அரசியல் செய்து முதல்வரை மகிழ்ச்சியில் திளைக்க வைத்துக் கொண்டிருந்தார். மீடியாவின் உதவியுடன் கராத்தேவின் செல்வாக்கு அபரிமிதமாக உயர்ந்தது. அவரின் இந்த அசுர வளர்ச்சி, கராத்தேவுக்கு முன்னரே அ.தி.மு.கவுக்கு வந்து, இன்று வெறுமனே இருக்கும் பலரையும் கடுப்பாக்கியிருக்கிறது.

இது போதாதென்று, மாநகராட்சி ஆணையரான விஜயகுமாருக்கும் கராத்தேவுக்கும் எப்பொழுதுமே ஏழாம் பொருத்தம்தான். இது மேலிடத்துக்குப் பிடிக்காமல் போகவே, துணைமேயரின் அதிகாரங்கள் படிப்படியாகக் குறைக்கப்பட்டு, அவை ஆணையர் வசம் ஒப்படைக்கப்பட்டன.

எல்லாவற்றுக்கும் உச்சகட்டமாக அமைந்துவிட்டது அண்மையில் சென்னையில் நிகழ்ந்த பூங்காக்கள் திறப்பு விழா. இதற்குத் தலைமையேற்க வேண்டியவர் துணைமேயரான கராத்தே. ஆனால் விழாவில் கலந்து கொள்ளவே அவருக்கு அனுமதி அளிக்கப்படவில்லை. திடுதிப்பென கவுன்சிலர் ஒருவர் பூங்கா திறப்பு விழா தொடர்பாக தீக்குளிக்க முயல, கராத்தேவுக்கு எதிராகக் காய்




# என்ன?

நகர்த்தி வரும் சிலர், இந்தச் சம்பவத்தை அரங்கேற்றியவரே கராத்தேதான் என்று பற்ற வைக்க, மேலிடத்தின் அனல் பார்வை கராத்தே மீது மீண்டும் திரும்பியது.

பூங்கா விவகாரத்தால் ஆத்திரமடைந்த கராத்தே, தமது ஆதரவு கவுன்சிலர்களுடன் கட்சியை விட்டு விலகவிருக்கிறார் என்று வதந்தி பரவ, கராத்தேவுக்கு எதிராகப் பிடியை இறுக்க அ.தி.மு.க தலைமை முன்வந்தது. இதற்கு வசதியாக, எதிர்கட்சி கவுன்சிலர்கள் கராத்தே மீது அவ்வப்போது கூறிய ஊழல் புகார்கள் தூசி தட்டப்பட்டன என்றும், அதற்கான ஆதாரங்களைத் திரட்டும் பணியில் காவல்துறையினர் ஈடுபட்டு வருவதாகவும், பல வழக்குகள் போடப்பட இருப்பதாகவும் தகவல் கிடைக்க, கராத்தே தலைமறைவாகி விட்டார்.



இவையெல்லாம் மேலோட்டமாகக் கூறப்படும் காரணங்கள் என்றும், உண்மையில் கராத்தே தனது அதிகாரக் குறைப்பு காரணமாக ஏற்பட்ட அதிருப்தியில், தான் ஏற்கெனவே சேகரித்து வைத்திருந்த, அமைச்சர்களுக்கு எதிரான முக்கிய ஆவணங்களை தி.மு.க

# "ஃபாரின் போறவங்க எல்லாம் கடத்தல்காரங்களா..?"

[redacted]

என்னதான் நடக்கிறது என்றறிய, கராத்தே மனைவி ஜோதியிடம் நாம் பேசினோம்.

உங்கள் கணவர் அடிக்கடி குடும்பத்தோடும் தனியாகவும் வெளிநாடு செல்வதாகவும், இதில் ஏதோ உள் நோக்கம் இருக்கிறது என்றும் சொல்கிறார்களே...

"ஆமாங்க. நாங்க சமீபத்துல குடும்பத்தோட மலேஷியா போனது உண்மைதான். அவரோட அத்தையைப் பார்க்கப் போனோம். இது என்ன பெரிய தப்பா? அப்போ ஃபாரின் போறவங்க எல்லாருமே கடத்தல் பண்றவங்கன்னு சொல்லிட முடியுமா? எங்களைச் சுத்தி என்ன நடக்குது, எங்களோட எதிரி யாருன்னே தெரியல. வர்ற



செய்திகளைப் பார்த்தா எங்க உயிருக்கே ஆபத்தாயிடுமோன்னு பயமா இருக்கு. இதுல இன்னொரு கொடுமை என்னன்னா, என் கணவரோடு, வழிப்பறி ஆசாமிகளையும் இணைச்சுப் பேச ஆரம்பிச்சிட்டாங்க. உண்மையிலேயே அவரு அப்படிப்பட்டவரா இருந்தா, அவரை துணைமேயரா தேர்ந்தெடுத்திருப்பாங்களா?"

அ.தி.மு.க தலைமையிடமிருந்தோ அல்லது மற்ற தலைவர்களிடமிருந்தோ ஏதேனும் தகவல் வந்ததா...?

"அதுதான் ரொம்ப வருத்தமா இருக்கு... பொதுவா அதிமுக தொடர்பா ஏதாவது தவறான செய்தி வந்தா உடனே முதல்வர் தலையிடுவாங்க. ஆனா இவரு விஷயத்துல இதுவரைக்கும் எங்கிருந்தும் ஒரு தகவலும் வரல... இருந்தாலும் என்னோட, என் குழந்தைகளோட உயிருக்கும், என் கணவரோட உயிருக்கும் பாதுகாப்பு தரணும்ங்கறதுதான் என்னோட கோரிக்கை."

இது தொடர்பான உண்மையை விளக்க நீங்களே முதல்வரைச் சந்திக்கலாமே?

"இல்லீங்க. இதுவரைக்கும் அப்படி

வசம் ஒப்படைக்க உள்ளதாகவும், ஆனால் நேரடியாகக் கொடுக்க இயலாததால் காங்கிரஸ் கட்சியில் இணைந்து அதன் மூலமாக ஒப்படைக்க உள்ளதாகவும், ஒருவேளை அந்த ஆவணங்கள் தி.மு.க கையில் கிடைக்கும் பட்சத்தில், அது ஆளும்கட்சிக்கு எதிராக வரும் தேர்தலில் எதிரொலிக்கும் என்றும் வெளியான தகவல்களின் அடிப்படையிலேயே இத்தனை கிடுக்கிப் பிடிகளும் என்கிறார்கள் விவரமறிந்த அ.தி.மு.கவினர்.

தற்போது நிலைமை கட்டுக்கடங்காமல் போய்விட்டது. கராத்தே இனி அ.தி.மு.கவில் நீடிப்பதற்கு அதிக

ஏதும் முடிவு பண்ணலை. எங்களோட வக்கீல் ஆலோசனைப்படிதான் இப்போதைக்கு நடந்துட்டிருக்கேன். ஏன்னா திருமணமாகி பதினோரு வருஷத்துல இப்போதான் முதன் முறையா பிரச்னை, பத்திரிகை எல்லாத்தையுமே சந்திக்கறேன்."

**காங்கிரஸில் இணைவதென்று முடிவெடுத்துவிட்டார் கராத்தே; அதைத் தடுக்கவே இத்தனையும் நடக்கிறது என்கிறார்களே...?**

"இது முழுக்க அரசியல் விவகாரம். எனக்கு அரசியலே தெரியாது. என்கூட அவரு அரசியலே பேச மாட்டார். இப்போ ரெண்டு வாரமாத்தான் என் கூட டெலிபோன்ல அரசியல் பேசறார். நானும் பேப்பர் படிக்கிறேன். இந்த நிமிடம் வரைக்கும் அவர் அம்மா தலைமையில் அ.தி.மு.கவுலதான் இருக்கார்."

**இத்தனை சிக்கல்களுக்கும் என்னதான் பின்னணியாக இருக்கும்?**

"சத்தியமா எனக்கு ஒண்ணுமே புரியலீங்க. என் கணவரோட பழகினவங்க வீட்ல போயி, துணை மேயர் எங்கே'ன்னு கேட்டு மிரட்டறாங்க. இதனால அவங்க குடும்பமும் பாதிக்கப்படுது. நான் என்ன சொல்றேன்னா, எங்க மேல தப்பு இருந்தா, கேஸ் போடுங்க. வீட்டை சோதனை பண்ணுங்க. வழக்குப் போடுங்க. சந்திக்கத் தயாரா இருக்கோம். மடியில கனமிருந்தாத்தானே வழியில பயம்? ஆனா ஒண்ணுமே சொல்லாம மௌனமாவே இருக்கறது ரொம்ப பயமா இருக்கு." ○

**- கராத்தே மனைவி**

வாய்ப்பில்லை. நிச்சயம் எதிர்கட்சி தான். இவர் மூலம் அ.தி.மு.க ஆட்சிக்கு எதிராக என்னவெல்லாம் செய்ய இயலுமோ, அத்தனையையும் செயல்படுத்தக் காத்திருக்கின்றன எதிர்கட்சிகள்!

**- இரா. முத்துக்குமார்**

படங்கள்: **ராஜன்**



## தராசு பதிலுக்கு ஸ்டாலின் விளக்கம்!

கல்கி 9.10.2005 இதழின் 'நீங்கள் கேட்டவை' பகுதியில், 'பத்திரிகையாளரைத் தகாத வார்த்தையால் தாம் திட்டியதைப் பற்றி ஒப்புக்கொண்டு ஸ்டாலின் வருத்தம் தெரிவித்துள்ளது பற்றி?' என்ற ஒரு கேள்வி கேட்கப்பட்டு, அதற்கான பதில், 'மறுபடியும் இப்படி நிகழாமல் பார்த்துக் கொள்ளட்டும்' என்று பதில் அளிக்கப்பட்டுள்ளது.

செய்தியாளரைத் தரக்குறைவாகப் பேசவில்லை என்று நான் அளித்த அறிக்கையினை அப்படியே தருகிறேன்:

'சென்னையில் நடைபெற்ற மகளிர் பேரணி குறித்து அனைத்து ஏடுகளும் செய்தி வெளியிட்ட போதிலும், அவற்றை விட முக்கியத்துவம் கொடுத்து ஒரு சில ஏடுகளில் நான் ஏதோ 'நக்கீரன்' செய்தியாளரைத் தரக்குறைவாகப் பேசியதாக; பத்திரிகையாளர் சங்கம் கண்டனம் தெரிவித்திருப்பதாக வெளியிடப்பட்டுள்ளது. நான் எந்தச் செய்தியாளரையும் எப்போதும் தரக்குறைவாகப் பேசியதும் இல்லை. நடத்தியதும் இல்லை. மகளிர் பேரணி என்பதால், அதற்குள் ஆண்கள் நுழைந்துவிடக் கூடாது என்பதற்காக; மற்ற ஏடுகளில் செய்திகள் வந்திருப்பதைப் போல பேரணியை ஒழுங்கு படுத்திக் கொண்டிருந்தேன். அப்போது மகளிர் அணிக்குள் புகுந்த ஆண்களுக்குள் இந்தச் செய்தியாளரும் இருந்திருப்பாரோ என்னவோ? எனவே வேண்டுமென்றே அந்தச் செய்தியாளரை நான் தரக்குறைவாகப் பேசிடவில்லை என்பதைத் தெரிவித்துக் கொள்வதோடு, அந்தக் கூட்டத்தினரோடு 'நக்கீரன்' செய்தியாளரும் இருந்திருப்பாரேயானால் அந்தச் சம்பவத்திற்காக வருத்தம் தெரிவித்துக் கொள்கிறேன். உண்மையில் செய்தியாளர்களுக்கு மரியாதை தர விரும்புகிறவன் நான் என்பதை அந்தப் பத்திரிகையாளர் சங்கங்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறேன்.'

**- மு.க ஸ்டாலின்,**
**துணைப் பொதுச்செயலாளர், தி.மு.க.**

# நீங்கள் கேட்டவை

**-தராசு**



• எக்ஸ்ட்ரீம்...



...சிரிப்பு!

★ லலிதா செல்லப்பா, சென்னை.

? தனியார் தொலைக் காட்சிகளில் நேயர்களின் வாழ்த்துச் செய்தி எஸ்.எம்.எஸ் மூலம் பெறப்பட்டு ஒளிபரப்பப்படுகிறதே... அதில் பெரும்பாலும் 'ஐ லவ் யூ'தானே இருக்கிறது... தொலைக்காட்சி இப்படி இளம் உள்ளங்களைச் சீரழிக்கிறதே?

! லவ் என்ற ஆங்கில வார்த்தைக்குப் பல அர்த்தங்கள் உண்டு. அன்பு, பாசம், காதல், காமம் எல்லாவற்றுக்கும் 'லவ்' என்ற ஒரே வார்த்தை பயன்படும். ஒன்றை 'பிடிச்சிருக்கு' என்பதற்கும் அதே சொல்லைப் பயன்படுத்தலாம். மெய்யான காதலில் பொதுப் பிரகடனத்துக்கு அவசியம் இல்லை. அது உள்ளங்களைச் சீரழிக்காது; சீர் தூக்கும்.

● ஆர்.கே. எப்சிபா, சென்னை-12.

? 'அரசியல் என்பது முழுநேரப் பணி, அதில் ஆர்வப்பட்டு பெண்களும் வந்துவிட்டால், வீடு, குடும்பத்தை யார் கட்டிக் காப்பாற்றுவது? இது சமுதாய நலனுக்கு உகந்ததாக இருக்காது' என்று 'சோ' சொல்கிறாரே...?

! உலகெங்கும் பெண்கள் பிரதமர் பதவி முதல் விவசாயக் கூலி வேலை வரை பல விதமான பணிகளில் இப்போதே முழுநேரம் ஈடுபட்டுத்தான் வருகிறார்கள். இதனால் குடும்பத்தைக் கவனிக்காமலா போய்விட்டார்கள்? அவர்கள் தங்கள் பணியைத் திறம்படச்

● பி. பாலாஜிகணேஷ், கோவிலாம்பூண்டி

? ரஜினி படத்தில் நடிக்க கால்ஷீட் இல்லையென்று ஐஸ்வர்யாராய் கூறியுள்ளாரே...?

ரஜினி படமான 'படையப்பா'வின் ஹிந்தி வடிவில் அமிதாப்புடன் நடிக்க ஐஸ் கால்ஷீட் தர முன்வந்தார். ஆனால், அது ஏற்கப்படவில்லை! மறுபுறமாக, ரஜினி கௌரவம் பாராமல் பொது நிகழ்ச்சியிலேயே ஐஸ்வர்யாராய்க்கு வேண்டுகோள் வைத்து ரொம்ப எக்ஸ்ட்ரீமுக்குப் போயிருக்கிறார். இந்த முரண்பாட்டினைக் காண சிரிப்புதான் வருகிறது.

# ரஜினிக்கு கால்ஷீட் இல்லையென்கிறாரே ஐஸ்வர்யாராய்..?

செய்ய கணவன்மார்களும் ஒத்துழைக்க வேண்டும்; குடும்பப் பொறுப்பில் அவர்களும் பங்கேற்க வேண்டுமென்று சொல்வது தான் நியாயம்.

● சீதாராம், சென்னை - 26.

? 'அஆ' நிலா... 'அப்பாசாமி' நவ்யா... நடிப்பில் யார் டாப்?

நிலா, சும்மா பளபளப்பான சினிமா செட்டிங். நவ்யா, நவரசம் காட்டும் ஜீவனுள்ள நாயகி.



* நவரச...



... பளபளப்பு!



* வீண் பழித்துரைப்பு!

● அந்தோணி, மும்பை.

? பயிற்சியாளர் சேப்பல் இரட்டை வேடம் போடுவதாக சுழல்பந்து வீச்சாளர் ஹர்பஜன்சிங் கூறுகிறாரே?

! சேப்பலுக்கு அணியில் உள்ள யாரிடமும் தனிப்பட்ட விரோதமோ, உள்நோக்கமோ இருக்க வாய்ப்பில்லை. நாளை ஒரு டெஸ்ட் தொடரிலோ அல்லது ஒன்டே தொடரிலோ நமது அணி வெற்றி பெறாது போனால், சிலுவை சுமக்கப் போகிறவர் கோச்தான். எனவே அவர் தனிநபரைப் பற்றிப் பேசுகிறார் என்று கருதாமல், அணியின் வெற்றி வாய்ப்பு கருதி கூறுகிறார் என்று எடுத்துக்கொண்டு, நல்ல முடிவுகளுக்கு வருவதே சிறந்த அணுகுமுறை. அவ்வாறின்றி அவரைப் பழித்

● என். மாணிக்கம், அரக்கோணம்.

? உச்சிமோந்து முத்தமிட்ட வைகோவை கலைஞர் சன் டீ.வியில் மட்டும் இருட்டடிப்பு செய்வதேன்?

! உச்சிதனை முகர்ந்தால்
தொண்டர் கூறாம் உவகை கொள்ளுதடா!
மெச்சி ஊரார் புகழ்ந்தால்
மெய்யாவே அச்சம் பெருகுதடா!



●பெருகும் அச்சம்!

● ஆர்.எம்.இ. மலை, நல்லான்பட்டி

? சந்தன வீரப்பன் இல்லாததால்தான் ஒகேனக்கல் பகுதியில் எல்லைப் பிரச்சினை தோன்றியிருப்பதாகச் சில பத்திரிகைகளில் செய்தி வெளியாகியிருப்பது உண்மையா?

! உசுரோட இருக்கிறபோதுதான் அவரை ஹீரோவாக்கி சம்பாதிச்சாங்கன்னு பார்த்தா... யானைத் திருடன் இறந்தாலும் ஆயிரம் பொன்தான் போங்க!



● ஆயிரம் பொன்!

துரைத்தால், 'நமக்கேன் வம்பு' என்று அவர் கூவிக்கு மாரடித்து விட்டுப் போவார். நமது கிரிக்கெட் முன்னேறாது!

● கே.ஆர். ராமசுப்ரமணி, திருவாரூர்

? சென்னையில் மாநகராட்சி சார்பில் சீரமைக்கப்பட்டுள்ள பூங்காக்கள் எப்படி இது தலீவா...?

! 2.10.05 கல்கியில் ஒற்றன் எழுதியிருக்கறதைத் தேடிப் படியுங்க தொண்டரே!

● அ. அப்துல்காதர், விளாத்திகுளம்

? 'விஜயகாந்த் ஆரம்பித்துள்ள கட்சியின் பெயரும் சரி, கொள்கைகளும் சரி ஒரு சதவீதம்கூட புதிய சிந்தனைகளை வெளிப்படுத்துவதாக இல்லை' என திருமாவளவன் கருத்துக் கூறியிருப்பது பற்றி..?

! புதியவையல்ல; ஆனால் திருமாவளவன் உள்பட அனைத்து பழைய அரசியல்வாதிகளும் மறந்து போனவை!

❒ வே. ஜெயராமன், நாகப்பட்டினம்

! அமளி இல்லாமல் சபை அமைதியாக நடைபெற வேண்டுமென்றால், சட்டமன்ற, பாராளுமன்ற உறுப்பினர்கள் குறைந்தபட்சம் என்ன செய்ய வேண்டும்?

! சிம்பிள்: எந்தப் பிரச்னையையும் விவாதத்தையும் அரசியல் நோக்கில் அன்றி, மக்கள் நல நோக்கில் அணுகி, ஆராய்ந்து விவாதிக்க வேண்டும். ○

❒ ரூ. 100 பரிசு பெறுபவர்:
வே. ஜெயராமன்
78, பெருமாள் வடக்கு வீதி,
நாகப்பட்டினம் - 611 001.

★ ரூ. 50 பரிசு பெறுபவர்:
லலிதா செல்லப்பா,
144 - பி, காந்தி மெயின்ரோடு,
சங்கர் நகர், பம்மல்,
சென்னை - 600 075

# மனசு

மனநல மருத்துவர் மாதவன் முன்பு விக்னேஷ் அமர்ந்திருந்தான்.

"சொல்லுங்க..." டாக்டர் கேட்டார்.

"சார்... எனக்குக் கொஞ்ச நாளா மன கல ஒண்ணு தோணுது. அதாவது நான் வாழ்க்கைல ஓரளவு வசதியா எந்தக் குறையில்லாம இருக்கேன். பட்... இது என்ன வாழ்க்கை அல்லது இதுதான் வாழ்க்கையா? இப்படியே இது தொடர்ந்து, எதுல போய் முடியும்? இந்த சராசரி வாழ்க்கை வாழறதுல யாருக்கு என்ன பயன்? அப்படியே ஏதாவது ஒரு முயற்சி செஞ்சு பெரிய சாதனை செய்யறதுல என்ன வந்துடப் போகுது...? புகழ்! சரி... அதுவும் எத்தனை நாளைக்கு? இல்ல ரொம்ப பணம் சம்பாதிச்சு, இல்லாதவங்களுக்கு உதவி செஞ்சா... அதுவும் எத்தனை நாளைக்கு...? ஒரு அம்பது வருஷம்...? அப்புறம்? ஸோ, நாம இந்த வாழ்க்கைய ஏன் ஒரு அல்ப திருப்திக்காக வாழணும்? பேசாம எங்கயாவது ஓடிப் போனா என்னன்னு தோணுது சார்? இப்படித் தோணுறது தப்பா? இல்லைன்னா இந்த எண்ணத்த எப்படி அவாய்ட் பண்றது? நீங்களே ஒரு வழி சொல்லுங்க."

விக்னேஷ் சொல்லி முடித்தான். டாக்டர் சிறிது நேரம் யோசித்து விட்டுச் சொன்னார்.

"உங்களுக்கு மனகல எந்தக் கோளாறும் இல்ல. பெரிய பெரிய ஞானிகளுக்கு வரக்கூடிய ஆரம்ப சிந்தனைதான் இது. இதுக்குப் பெரிய மருந்தெல்லாம் கிடையாது. நீங்க ஒரு வாரம் கழிச்சு என்னை வந்து பாருங்க. நான் கொஞ்சம் ரெஃபர் பண்ணிட்டு உங்களுக்கு கவுன்சிலிங் தர்றேன். ஓகே...?"

"அதுக்குள்ள நான் எங்கேயாவது மனம்போன போக்குல போய்ட்டேன்னா...?" விக்னேஷ் கேட்டான்.

டாக்டர் சிரித்துவிட்டு, "அப்படிப் போனா உங்களுக்கு என்னோட ட்ரீட்மெண்ட் தேவைப்படாது!"



மீண்டும் ஒரு வாரம் கழித்து விக்னேஷ் டாக்டரைப் பார்க்க வந்தான். க்ளீனிக் பூட்டியிருந்தது. பக்கத்தில் விசாரித்ததில்,

"அது என்னவோ தெரியலீங்க! டாக்டரை நாலஞ்சு நாளா இந்தப் பக்கமே காணும்! வீட்லயும் இல்லையாம். எங்கயோ கண்காணாம ஓடிட்டார்னு பேசிக்கிறாங்க!" என்றார் ஒருவர்.

ஏ.ஜி.எஸ்.

*சிந்தை வருடும் சிறுகதைச் சித்திரங்கள்...*

அமரர் கல்கி, எம்.டி.வாசுதேவன் நாயர், சாருகேசி, சுபா, ம.வே.சிவகுமார், சீதாரவி, க.சீ.சிவகுமார், மஹி, நெய்வேலி பாரதிக்குமார், எஸ்.வேணுகோபாலன், ரமா...

இன்னும்... இன்னும்...

**புரட்டப் புரட்ட ஆனந்தம்...**
**படிக்கப் படிக்க பேரின்பம்!**

# கல்கி




ஓராண்டு சந்தா ரூ.390/- செலுத்தினால் ரூ.90/- பெறுமானமுள்ள கல்கி தீபாவளி மலர் பரிசாகக் கிடைக்கும். தனிப் பிரதியும் வாங்கலாம். கூரியரில் பெற ரூ.30/- சேர்த்து அனுப்பவும். முடிவு தேதி : அக்டோபர் 20, 2005.

**சந்தா / தொகை அனுப்ப வேண்டிய முகவரி :**

சர்க்குலேஷன் மேனேஜர், கல்கி காரியாலயம்
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல்,
சென்னை - 600 032. தொலைபேசி : 2225 1522, 2225 0623

